| எண் | நீ இல்லாத உலகத்திலே |
|---|---|
| 1 | அழகின் அவை |
| 2 | அன்பே ஆருயிரே |
| 3 | அவளும் நானும் |
| 4 | ஆயிரம் வாசல் இதயம் |
| 5 | ஈரவிழிக் காவியம் |
| 6 | என்னை மறந்ததேன் |
| 7 | என்னவளே அடி என்னவளே |
| 8 | காலங்களில் அவள் வசந்தம் |
| 9 | காதல் என்னும் கனவு |
| 10 | காதல் மகள் |
| 11 | காதலன் |
| 12 | லைலா மஜ்னு |
| 13 | மன்னிப்பு |
| 14 | மறவாத காதல் மனம் |
| 15 | மும்தாஜ் |
| 16 | முதற் காதல் |
| 17 | நீ இல்லாத உலகத்திலே |
| 18 | பாஞ்சாலியின் காதல் |
| 19 | இராவணன் காதல |
| 20 | துயிலாத கண்கள் |
| 21 | உறவும் பிரிவும் |

# அழகின் அவை

பங்கய முகத்தாள் பக்கத்தில் அமர
தங்கமாய் ஜொலிக்கும் அழகில் மனம் மயங்க
அழகு முல்லையின் வாசம் சுவாசத்தை நிறைக்க
பொங்கும் பூம்புனலாய் நெஞ்சில் பேரின்பம்





மங்கை விழிகளில் குவளை பூத்தாட
குமுதச் செவ்வாயில் அமுதம் கூத்தாட
பற்றிய பூக்கரங்களால் பரவசம் பாய்ந்தோட
வற்றாத காதலைச் சொல்ல வார்த்தையில்லை

மல்லிகையை கூந்தலில் வைத்தாள்
மாசறு பொன்மேனியில் பரிமளம் வைத்தாள்
நேசத்தை நெஞ்சில் வைத்த கன்னி-கள்ளமாய்
காதலை என் நெஞ்சில் வைத்த அங்கயற்கன்னி

குங்குமத்தைப் பிறை நுதலில் வைத்து,
மங்கலப் பொன்மேனியில் நாணத்தை வைத்து
புன்னகையை செவ்விதழில் வைத்த வள்ளி-காதல்
பொன் விலங்கால் என்னைச் சிறையிட்ட கள்ளி

என் இதயம் துடிப்பதும் உனக்காக
என் இமைகள் மலர்வதும் உனக்காக
என் மொழியில் கவிதை பூப்பதும் உனக்காக
காதலே நான் வாழ்வதும் உனக்காக



கொடியிடை தழுவத் துவள-கொவ்வை
இதழ்களில் அமுதைப் பருக-குவளை விழிகள்
பூத்துச் சிரிக்க, ஆனிப் பொன்மேனியில்
நாணத்தின் ஆயிரம் நர்த்தனங்கள்

மொழியில் கவிதை மலர, கோதை மலர்களும்
வாசம் வீச, இதழ்கள் கொண்டு இதழ் கள் பருக
இன்பத் தேன் சிட்டாய் மனம் எழுந்து பறக்க
காதல் இன்பத்தில் உலகை மறந்த காதலர் யாம்

செவ்வாய்ச் சிவப்பை விழிகள் ஏந்த, விழிகளின்
வெளுப்பை வாய் ஏந்த, அமுதைப் பருகி விடாய் வளர
அணைத்து, அணைத்து காதல் தீ அணையாமல் வளர
காதற் காமத்தில்தான் எத்தனை பேரின்பம்?

முடி அளந்தேன் பூங்குழல் எனப் புகழ்ந்தேன்
அடி அளந்தேன் பங்கயம் என இரசித்தேன்
இடை அளந்தேன் நூலிடை என வியந்தேன்,
இதழ் அளந்தேன் தேன் சுவை என மலைத்தேன்





முகம் அளந்தேன் மதி முகம் என மலர்ந்தேன்,
மணம் நுகர்ந்தேன் மலர்வனம் எனத் திகைத்தேன்
விழியளந்தேன் வேலோ கயலோ என மயங்கினேன்
மொழியளந்தேன் கானக்குயில் என மனம் குளிர்ந்தேன்

நடையளந்தேன் அன்னமும், தோகையும் ஒன்றான சாயல்
அழகளந்தேன், முத்தேவியரும் ஒன்றான ஒப்பற்ற எழில்,
அள்ளி அணைத்துக் காதலை அளந்தேன், ஆனிப்
பொன்மேனியில் மூழ்கி என்னை மறந்தேன்

முத்துப்பற்களும், மோகனச் சிரிப்பும் நெஞ்சை அள்ள,
கயல்விழிகளும், செவ்விதழ்களும் காமன் படை சொல்ல,
மெய்யிட்ட கோலங்களில் என் உயிர் மெய் காதலாகித் துடிக்க
அழகின் திருச்சபை, என் மனதை ஆளும் காதல் பேரவை

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-25-09-2023

# அன்பே ஆருயிரே





நீயில்லாத உலகம் நிலவில்லாத வானனானது
உன்னை எண்ணி உருகும் என் நெஞ்சம் காயமானது
பூக்கத் தவித்த என் காதல் ரோஜா, புழுவரிக்க
பொழுது புலருமுன் கருகிப்போனது

கண் மறைந்த என் காதல் நிலா
மண்ணுக்குள் உறங்க-கானக்குயிலே
என் கானமும் முகாரியானது
கலாப மயிலே என் நடனமும் அவலமானது

என் காதல் பூவனத்தில்
சோகப் புயலின் அட்டகாசம்
என் காதல் கடலில்-சோகச்
சுனாமியின் ருத்திர தாண்டவம்



சொல்லத் தவித்த காதலைச் சொல்ல முடியாது தவித்த
நாட்களில் என்னோடு நீ, சொல்லி மணந்த காதலை
சுவைக்க முன், கண் மறைந்த காதல் நிலவு
என் மனதில் சோக எரிமலையின் தகிப்பு

மலர்ந்த காதல் ரோஜா மணம் வீசும் முன் உதிர்ந்ததே?
சூடிய மலர் வாடமுன், பூசிய மருதாணி காயமுன்
விடை தா என்றே காதல் அஞ்சுகம் என்னைப் பிரிந்ததே?
என் வாழ்வின் பெருஞ்சுகம் மறைந்ததே



துடிக்கும், இதயமும், தவிக்கும் சுவாசமும் சொந்தமாக
சுவாசக் காற்றாய் என்னை நிறைத்தவளே
கண் மறைந்தாள், இதயவீணையில் மோகனமாய்
ஒலித்தவளே மௌனித்துப்போனாள்-



வாடுமே என் மனம் என்றே, வாட்டும் நோயை மறைத்து
வாச மலராய் தன்னைச் சூட தந்த கோதை, இன்றோ-
சீதையை இழந்த ஸ்ரீராமனாய் வேகும் என் சிந்தை

சூட மலர்ந்த என் சுந்தரியை நோய் அரித்ததென்ன
நாளும் மலர்ந்த என் வான் மதியை அமாவாசை
நிரந்தரமாய் மறைத்ததென்ன, சோகச் சுனாமி
நாளும் என்னைச் சுக்கு நூறாக்குவதென்ன?





கண்ணில் தெரிந்து, நெஞ்சை நிறைத்து
மண்ணுக்குள் மறைந்த எந்தன் காதல் தேவதை
காலம் கடந்தும் நினைவாய் மலர்ந்து
அமுதாய் இனிக்கும் காதல் பூ மழை

உன் மூடிய பூவிழிகளுக்குள் என் உதயம் அஸ்தமித்தது,
குறுநகை மலரும் செவ்விதழ்களுக்குள் என் மொழி
ஊமையானது, அணைத்து காதல் மொழிந்த என் உயிர் மெய்யும்
அணையும் தீபமானது, நம் காதல் அமர காவியமானது

புன்னகைப் பூக்கள் மலரும் என் காதல் பொய்கையில்
கண்ணீர் மழை- பூவிழிகள் அணைத்த நெஞ்சில்
அம்பு தைத்த நிலை, அழகே நீயின்றி
வாழ்வே மாயம் என்ற அவல நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-15-10-2023*

# அவளும் நானும்





கண்டு விழிகளும் தேன் உண்ட வண்டாய்க் கிறங்க,
காதல், காதல் என்றே மனம் ரீங்காரம் இசைக்க
வண்ணப் பூவை வட்டமிட்டு குதூகலித்த கண்கள்
அண்ணலும் நோக்க-அவளும் நோக்க ஒன்றான மனங்கள்

கண்களினால் காதல் சொல்ல-நாணிப்
புன்னகை பூத்த கன்னி -நான் சூட
தன் மனதை காதலால் சூடிக்கொடுத்து-என்னை
காதலில் வீழ்த்திய ஆண்டாளாய்க் கன்னி

கன்னி மனம் கனிய-காதல் மனம்
பண் இசைக்க. ஜோடிக்குயில்களின் அமுதகானம்
விண்ணில் எதிரொலிக்க, வானவர் பொழிந்த
பூமழை-நெஞ்சத்திலோ காதல் மழை

வண்ணச் சேலை இதழ்களாய் மாறிட
வாசமுல்லை பொன்மேனி வாசமாய் மணந்திட
செவ்விதழ் "கள்" மலைத்தேனாய் இனித்திட
என்னைச் சூட புல்வெளியில் பூத்த பூவை



முத்துப் புன்னகை என்னை மயக்க-அழகோ பொன்மானாய்
என்னை அலைக்கழிக்க, மனம் மயங்கி காதல் எனத் தவிக்க
மலராய்க் கார்குழலில் என்னைச் சூடி-குமுத வாயால்
காதல் அமுதைப் பருகிடத் தந்த பாவை

நூலிடை அசைய, நூபுரம் என்னை அழைக்க
பூங்குழல் மணக்க-கொலுசு மோகனம் இசைக்க
நாணிய அழகில் கம்பனின் மைதிலி-காதலில்
வீழ்த்திய கன்னியோ காளிதாஸின் சகுந்தலை

நாற்குணங்கள் பூத்த வண்ண மங்கை
மும்மகள்களும் ஒன்றான அழகு நங்கை
என் கைத்தலம் பற்றிய காதல் சீதை
நான் சூட தன்னைத் தந்த ஆண்டாளாய்க் கோதை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-28-09-2023

# ஆயிரம் வாசல் இதயம்

---

**அவள்**



காதல் வேள்வியில் பூத்த பொன் மலர், குவளை விழிகளில்
மை சிரிக்க, பூங்குழலில் வாச நெய் மணக்க,
குமுதச் செவ்வாயில் அமுதம் இனிக்க, ஆடை மூடிய
அழகில் பாலாடை, அசைந்தாடும் தென்றலில்
இசைந்தாடும் பூங்கொடியில் வீசும் காதல் வாடை



நர்த்தனமாய் நடையும், கீர்த்தனமாய் கிள்ளை மொழியும்
சீதனமாய் கொண்டவள், அன்ன நடையோடு கொடியிடையும்
அசைந்தாட, **ஏழ்மைக் களை எடுக்க-செல்வரிடம்**
**காமக்களை பிடுங்கும் காமினி**

இசையோடு கைபேசி அழைக்க, இரவில் மலரும்
தேன் நிலவை மன்மத விருந்துக்கு காமன் அழைக்க,
பஞ்சணை மலராய் பூக்கும் பாவை, பாவ
புண்ணியம் தாண்டிய ஆதித்தொழிலாளியான பூவை




நெஞ்சினிக்க நேசம் சொல்லாமல், நிறை அழகை
ஏற்றிப் போற்றாமல், மஞ்சத்தில் கொஞ்சும் மன்மதன்
காமசூத்திரம் அறியாத காமச்செல்வன்

இதழ்களால் மெய்யில் கவிதை எழுதாமல், நுதலில்
ஒரு முத்தம் பதியாமல், அம்மணமான பொன் மேனிக்குள்
துடிக்கும் ஆன்மாவின் காதல் புரியாமல்,
மன்மதக் கலையின் மகத்துவம் புரியாத காமுகன்-

சீதனத்தில் வாங்கிய-மனைவி ஆடிக்கொரு தடவை
கொறிக்கும் நொருக்குத் தீனி-வாடகைக்கு எடுத்த
பூவையோ  முக்கனியிலும் இனிய தேன்கனி

**கனவும் காதலும்**

**காதல் கடலில் மூழ்கியபோது-உன் முத்தத்தால்**
**மூச்செடுத்தேன், செவ்வாயில் வாழ்வதென்பதை**
**உன் செவ்வாயில் அறிந்தேன்**

அணைத்துக்கொள், என் உணர்வுகளை புரிந்து கொள்
பொன் மேனியை ஆடையாக்கி, என் பூவாசத்தை சுவாசமாக்கி
என் கனவுகளைத் தென்றலாக்கி, என் நரம்புகளை-யாழாய் மீட்டி
என் இதயத் துடிப்பின் இசையை கேள்
யாரும் நுழையாத இதயத்துள் நீ மட்டும் நுழைய



என் அந்தரங்கத்தின் கதவுகளை உனக்காய்த் திறந்து-
என்னையே உனக்கு நைவேத்தியமாய் படைக்கின்றேன்
சிவமாய் வா, சக்தி என்னை, உன்னில் ஒரு பாதியாக்கு

லிங்கமாய் நீ -யோனியாய் நான்
சிவசக்தியாய் நாம்-**காமமே படைத்தலில்**
**கடவுளின் பொறிமுறைச் சூத்திரம்**

என்னை முழுமையாய் காட்டிட-எனக்கு
காதல் சொன்னவர் யாருமில்லை
என்னை அம்மணமாய்ப் பார்த்தவர்களுக்கு
என் மனம் தெரியவில்லை-

காதலே, மனதோடு, உடலையும் காட்டும் கண்ணாடி-
அறிந்தே-உன்னைக் காதலனாய் தெரிந்தேன்




நெருக்கம் என்பது நெருங்கிடும் உடல்களில் இல்லை-
நுதலில் இடும் ஒரு முத்தம், இதழில் பதித்த
ஆயிரம் முத்தங்களைவிட இனிமையானது-
மென்மையானது கண்ணியமானது.

காதல் கண்ணியமான உறவின் தெரிவு
காதல் உண்மையைப் பகிரும் இன்ப உறவு
உடலும் ஆன்மாவும் சங்கமிக்கும் ஆனந்த நிகழ்வு

பெண்மையின் மனம் குளிர-ஆன்மா மலர
ஆண்மை இசைக்கும் சங்கீதம் காதல்,
முழுமையல்ல நான் அதனால் என்னை
முழுமையாய் பகிர்கின்றேன்

பகிர்தலே முழுமையாகும் வழி,
சத்தியம்- சிவம்- சுந்தரமாய்
சிவசக்தியாய் தெய்வீகக் காதல் நெறி

ஆழமாய் முத்தமிடு, வாய்வழி நம் ஆன்மாக்கள் இணைய
**ஆடைகள் இலையுதிர்கால இலைகளாய் தாமாய் உதிர**
ஆழமாய் முத்தமிட்டு என்னுள் வேர் விட்டு
ஆண்டாள் என்னை கண்ணனாய் ஆட்கொள்

பணம் படைத்த உலகில்-காதல் மனம் தேடும் பெண்மை
பொன்மானைத் தேடிய சீதையின் மென்மை
உன்னை நினைந்து உருகும் என் நினைவுகள் இரகசியமாய்



உன்னைக் காதலிக்க, நிராகரித்தல் இன்றி-இரவுகளில்
கனவுகளால் உன்னைத் தழுவி நெஞ்சம் மகிழ
உன் சொந்தம் நான்-என் சொந்தம் நீ



உடல் தாண்டி-மனம் இணைய, தூரங்கள்
நம்மைப் பிரித்தாலும், இதயங்கள் இணைத்த உறவு-
காதலர் நாம் படைத்த எம் பிரபஞ்ச உலகு

இதழ்களால் ஈரமாக்கி-பூவை என்னை காயாமல்
காத்துக்கொள், ஈரமான ரோஜா எனைச் சூடி
வாடாமல் போர்த்திக்கொள்

**அவன்**

இதழ் கொண்டு இவளை அளக்க முயன்றேன்-முடிவில்
என்னை மறந்தே, இன்பக்கடலில் மூழ்கிப்போனேன்.
அம்மணமாய், காதல் சுரத்தில் வாடும் பெண்மைக்கு
சிவமே ஆடையானேன், என்னில் பாதியான உமையாள்
காதல் நர்த்தனம் ஆடும் சிவசக்தியாய் நாம்

**அவலம்**

அந்தியில் மலர்ந்து-அதிகாலையில்
உதிரும் அந்திமந்தாரை- காமனின்
அர்தஜாம பூஜையின் செந்தாமரை-காமனுக்கு
அர்சனை மலரானபூவை ?

**அவள் நிலை**

முத்தமழை பொழிந்து காதல் சொல்லாமல், மோகனப் பொற்சிலையை
ஆரத் தழுவி சுருதி சேர்க்காமல், மன்மத ராகம் இசைக்காமல்
கயல்விழி பார்த்து-கவிதை சொல்லாமல், காமனை அழைக்க
காதல் வேள்வி செய்யாமல் தொடங்கிய அசுர யாகம்

She has feelings,
She has love,
She is beautiful,
But above all, she is Prostitute..
We hate her, we scold her, We leave her in the Dark world, We say she has worse life, but above all She is a Prostitute, Can you answer me, why we hate her ? For whom she is Prostitute ? For me, No... Who made her a Prostitute ? The Lord or Us ? Or your Lust ? Or its you the MAN..!!

— Maaya

YourQuote

உச்சம் காணாமல், ஒரு சிகரம் தொடாமல், கலிங்கம் உரித்து
காமம் விதைக்கும், காமக்காரனின் விதை நிலமாய்
நாளும் துச்சாதனர்க்கு-பொன்னுக்காய் துகிலுரியும்
திரௌபதியாய், மதுகாரிக்கு இதழ்விரித்த பூக்காரியோ பாவம்

இதழமுதம் பருகி, இவளமுதம் எனச் சொல்ல-நெஞ்சில்
காதல் இல்லை, காதலாகி மெய் கொண்டு-மெய் கடைந்து
பேரின்பம் காண காமத்துக்கு வரமில்லை-

அன்பினால் ஆரத் தழுவி, ஆடையாய் மூடிக்கொள்ள
காமுகனுக்கோ காதல் கரங்களில்லை, அணைக்க அணைக்க
வளரும்-காதல் தீ, அணைக்க அணைக்க அணையும்-காமத் தீ
ஊமை நெஞ்சில் அணையாத சோகத்தீ

பூவாய் நான் மலர-என்னில் வேரூண்டு, கனியாய் என்னை உண்டு
காதல் பசியாறு, ஈர மண் என்னில் காதல் விதை தூவு
காதலாகி பூக்கின்றேன்-காதலனாய் இதயத்தில் சூடிக்கொள்

காமத்தீ மிதிக்கும் பக்தனாய் நீ மாறு, பூ மிதிப்பிற்காய்
இதழ்விரிக்கும் பூவையாய் நான் மாறி, ஆடை களைந்து
கொக்கி கழற்றி, அம்மணமாய்-அழகாய்-அம்மனாய்
தரிசனம் தருகின்றேன் தேவி தரிசனம் எனக் கூறு

*அவலம்*




உழுது களைத்த உடல் ஒதுங்க, உருவில்லாத் துயர் மலையாய்
மனதை நொருக்க-அழகால் செதுக்கி அழுகையால் முகம் துடைக்க
விதி செய்தான் -விலை மாதாய் சதி செய்தான் பிரம்மன்

கவிதையல்ல வாழ்வு, களிப்பும், கண்ணீரும், சிலுவையும்
கலந்த கலப்படம், நிஜங்களைவிட நிழல்களும்
மலர்களை விட முட்களும் மலிந்த உலகில்
நீரில் மூழ்காத தாமரை நித்தம் கண்களில் மாறாத நீர்த்திரை

நிந்தனை வந்தனை தாண்டி-நித்தம் நிர்மலமாய் பூத்து
கண்ணில் நீர் வடிய கன்னி உதிர்வாள்
இறைதாள் உள்ளத்தில் பதிய
இன்னோர் மரிய மதலேனாய் பெண்ணாள்

கண்ணீர் பூச்சரம் கால்களை கழுவிட
கவிதைப் பூச்சரம் இறைவனை தொழுதிட
விலைமாதாய் இவள் வாழ்வு
சம்போகத்தில் நாளும் இவள் சாவு



கொழுகொம்பில்லா பூங்கொடி, சூறாவளியில் ஆடும் காற்றாடி
சத்தியம்-சிவம்- சுந்தரம் மனம் உருகி பாட- சிவனுக்காய்
தவமிருக்கும் தேவி- சிறையிருப்பதோ அசோகவனம்-
காதலில்லா வாழ்வோ வரண்ட பாலைவனம்

மெய் கொண்டு மெய் தின்று, பெண்ணின்பம் தேடும் உலகில்
பெண்களே விபச்சாரி என்பது வேடிக்கை-நாளும்
கற்பழிப்பும், வல்லாங்கும் ஆண்களின் கேலிக்கையாக
பெண்பாவம் தீராத பாவமாக-காமுகனே
உன் தாயும் பெண் என்பது நீ அறியாத சாபம்.

நீ வந்த யோனி நொந்து பெற்றது உன்னை
காமுகனாய் நீ உழுத யோனி-நொந்தே
பாவி எனச் சாபமிட்டதும் உன்னை



அன்பெனும் அரியத்தினூடு அம்பு தைத்த விலைமகள்
இதயத்தைச் செலுத்திட ஏழு வண்ணங்கள் தாண்டிய
அரிதான வண்ணங்களாய் அவள் துயரங்கள்
ஏழு ஸ்வரங்களை கடந்த கண்ணீரக் கவிதைகளாய்
அபூர்வ ராகங்களாய் அவள் அழுகைகள்

கஜீராகு சிற்பத்திலும் அழகாய், அம்மணத்திலும்
ஆடையிலும் அவள் காதற் கோலங்கள்
வன்புணர்வு வேண்டாம்-மெய் காதலே நல் உறவு

பள்ளியறைக் கோலங்களை-புள்ளி மயில்-ஏழ்மையால்
பாதையில் போட்டாள், இரசிக்க யாருமின்றி-
பெண் நிலவோ, கட்டில் காட்டில் காய்ந்தே தேய்ந்தாள்

காமத்திற்கு சூத்திரம் வகுத்து, கலையாய் இரசித்துப்
போற்றிய உலகில், காதல் உயர்ந்த கலை
கற்றவர் இரசித்தார்-மற்றவரோ காமுகராய்
விலங்குகளாய் அலைந்தார்

யோனிக் கடலில் விந்து கலந்திடத் தோன்றும் ஜந்து
யோனி வழிப்பிறந்து, யோனியில் ஆடிக் களித்து
மூச்சடங்கிட சுடுகாட்டில் சாம்பலாகி-கங்கையில்
கரைந்து மறையும் காமச் சிந்து




ஒவ்வாரு முறையும் உழுது விதைக்கும்போது
கசியும் கண்ணீரில் அவள் ஆன்மா உருகிக் கரையும்-
பெண்மையைப் போற்றினால்-தாய்மையே தெய்வம்
தாயின் காலடியில் சொர்க்கம்

கண்ணகி இருந்தும் மாதவியைத் தேடும் ஆணினம்
காமுகனுக்கு கன்னியர் மடியிலே சுவனம்?
கற்பும், மானமும் கடைச்சரக்கான அவலம்-பாஞ்சாலி
சீதை, மாதவி, அகலிகை, கண்ணீர்க் காவியம்

நெய் வளர்த்த தீயில் நீராடி வந்தாள் சீதை
கற்பைச் சொல்ல, ஆண்டுக்கொருமுறை -தீயில் நீராடி
அண்ணன், தம்பிகளைச் சேர்ந்தாள்-பாஞ்சாலி
வாழ்வில் பலமுறை, பெண் வாழ்வோ சோதனை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-08-10-2023*

# ஈர விழிக்காவியம்

விண்ணைத் தாண்டி வந்த தேவதையோ?
மண்ணில் உலா வரும் பௌர்ணமியோ?
காதல் தேன் சொட்டும் வண்ணப் பூவோ?
கவி பாடும் பூங்குயிலோ? கன்னி

இளநெஞ்சை ஆட்டுவிக்கும் குறிஞ்சித் தொகையோ-என்
இதயத் துடிப்பைக் கூட்டிவிட்ட காமன் கணையோ-இவள்
என் கவிதைகளில் மையலுற்ற ராதை
காதல் கொண்டு மயங்கி நின்ற சீதை



கல்லூரி நண்பணின் உறவு
கவிதைப் பரிமாறலில் மலர்ந்த நட்பு
கவிஞனாய் என்னை உருமாற்றிய புது வரவு
என் இரசிகையாய் தன்னை மாற்றிய நட்புறவு

வண்ணம் கொண்ட பெண் மயிலின் எண்ணமெல்லாம்
காதலாகி இவளும் புதிய மீராவாகி
கண்ணனாய் என்னைக் கண்டு நின்றாள்
காதலால் உருகி நின்றாள்.

மையெழுதிய விழிகள் மையலில் கரைய
கயல்விழிகளோ கண்ணீர்ப் பூச்சொரிய
உருவழிந்த ஓவியமாய் நின்றே
கவிதையால் இதயத்தை யாசித்த கோதை

மையெழுதிய விழிகளிலோ
"சகுந்தலையின" ஏக்கம்
கவிதை சொன்ன தேன் இதழ்களிலோ
காமத்துப்பாலின் மயக்கம்.

கன்னி மகள் காதல் கவிதை சொன்னபோது
நட்பைக் கற்போடு காத்திடக்-கவிஞன்
கனி நெஞ்சம் கல்லானது
பாலை நிலம் நோக்கி-பொருள் தேடப்
சொல்லாமல் பயணமானது



முத்தான அவள் உறவும் இரத்தாகிட
முழு நிலவிற்கும்-இவன் வானம்
அமாவாசை என்றாகிட-பொன்நிலவோ
புது வானில் காதல் உலாப்போனது
அவன் வாழ்வோ-பாலையில்
காய்ந்தழியும் தேய்பிறையானது

ஆண்டுகள் பல போனபின், அன்னையும்
விண்போன பின் ஒற்றைக் குயிலாய்க் கரைகின்றான்
தனிமரமாய்த் தவிக்கின்றான்
அன்பிற்காய் அணைக்கும் உறவிற்காய்
ஏங்கித் தவிக்கும் காதல் கவிஞன்

காயாத அவன் விழிகளிலோ-இன்றும்
காதலின் வற்றாத ஈரம்-இதயத்திலோ
சீதையை இழந்த ஶ்ரீராமனின் துயரம்

ஈரவிழிக் காவியமான வாழ்வு
அன்னையைப் பிரிந்து-அன்புக் காதலையும் இழந்து
அன்பிற்காய் ஏங்கும் உறவு-மனதில்
இறைவன் துணை என்ற மாறாத துறவு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-7-04-2023*

# என்னை மறந்ததேன் ?

---





ஏன் மறந்தாய் என்னை?, தேய்ந்து மறையும் வான் நிலவும்
மீண்டும் பிறந்தே, காதல் வானைத் தேடிவர, கரையை
தழுவி மடியும் அலைகளும் மீண்டும். மீண்டும் எழுந்தே
காதலைச் சொல்லி மகிழ, கடலினும் காதலின் ஓயாத அலைகள்
வான் கடலிலும் நிலவின் காதல் நிலைகள்

மலையில் பிறந்து-மடுவில் விழுந்தும்
கடலைத் தேடும் நதியின் காதல் ஓய்ந்ததில்லை
சங்கமத்தில் காதலின் ஆனந்த நர்த்தனம்
காதலருக்கே புரியும் அன்பின் கீர்த்தனம்

கரைந்தே காதலைச் சொல்லும் குயிலிற்கும், கனிந்தே பதில்
குரல் கொடுக்கும் இணை, கரையும் குரலில் கல்லும் உருக
காதல் நெஞ்சம் உருகியே குரல் கொடுக்க, இணையில்லாக்
காதல் இசையாக காற்றினிலே வரும் கீதம்

கண்ணன் தேடுகிறான்-என் காதல் ராதை எங்கே?
இராமன் தவிக்கின்றான் என் காதல் சீதை எங்கே?
காலமெல்லாம் காத்திருப்பேன் என்றவளே
வார்த்தை மறந்தாள் -காதலைத் துறந்தாள்.



என் கண்களில் ஈரம் காயவில்லை, என் நெஞ்சுக்குள்
சோக எரிமலை உறங்கவில்லை, என் இதயத்திலும் நீ
எழுத்திலும் கவிதையாய் நீ, என் வண்ண ஓவியமாய் நீ,
ஏனடி என்னை வருத்திடும் காதல் புயலாய் மாறினாய் நீ?

வெந்த புண்ணில் விழும் அமிலத் துளிகளாய், நொந்த மனதில்
காதலே உன் பிரிவு, மலரைத் தழுவி நிலவும் காதல் சொல்ல
மனதை தழுவும் உன் நினைவும் காதல் சொல்ல, காதல் ஒரு தவம்-
கன்னி மனது ஒரு வரம், காதலின்றி சாதலும் பெரு வரம்

வண்டுபடு கூந்தல் வாசம் என்னை மயக்க-கண்பட நாணும்
காதல் மலர் முகம் என்னைக் கனவிலும் வருத்த
உண்டும் திகட்டாத இதழமுது எங்கே என இதயம் கேட்க
சுவாசத்திலும் உன் மணம், நேசத்திலும் உன் மனம்

அஞ்சுகமாய் கொஞ்சி, கோகிலமாய் கரைந்து
அன்னமாய் நடந்து-வண்ணமயிலாய் ஆடியவள்-என்
நெஞ்சுக்குள் காதல் கூடு கட்டிய தூக்கணம் குருவி எங்கே?



கனவும். நினைவும் காதலே என்னை வாட்ட
நிலவும், மலரும் காதலே உன்னை நினைவுட்ட
நேசம் மறவாத காதல் நெஞ்சே
என்னை மறந்த துயரம்தான் என்னே?

பண்ணால் துதிக்க-வண்ணத் தமிழ் பெண்ணாள்
வாசப் பூச்செண்டு கொடுக்க
காதல் மனம் தந்த கன்னிப் பெண்ணாள் எங்கே?

ஒரு மொழிக்காய் தவமிருந்து, ஒரு சேதிக்காய்
தூது விட்டு, துயில் கொள்ளும் அலைபேசி
துயில் மறந்து-பசி துறந்து, பஞ்சணை விடுத்து-
காதல் நோன்பிருக்கும் பரதேசி, காதலே என்னை நீ நேசி

விண்ணும், மண்ணும், விரி கடலும், நதியும். குயிலும்,
மலரும், வண்டும் காதல் சொல்ல-கலாபமயிலே
ஏனடி காதலைச் சொல்ல மறந்தாய்?
காதலன் என்னை மறந்தாய்?



உன்னைக் காணாமல் கண்களும் கண்ணீர் சிந்த
உன் மொழி கேளாமல் செவிகளும் வாடிச் சோர
என் வீணையிலும் சோகமடி, இதயத்தில் எரிமலையின்
குமுறலடி , என் கவிதையிலே ஒற்றைக்குயிலின் கானமடி



பாச மலராய் சூட நினைத்தவளோ, காகிதப்பூவாய்
கசக்கி எறிந்தாள், சோடிக்குயிலாய் பாட நினைத்தவனை
ஒற்றைக்குயிலாலாய் கரைய விட்டாள்.

காதலும் கன்னியருக்கு இளம் பருவத்தில் ஆடி மகிழ-இன்ப
விளையாட்டுப்போலும்?, கட்டித் தழுவி கொஞ்சி மகிழ்ந்தபின்
காதலையும் ஒரு மூலையில் தூக்கிப்போட , அன்பே உன் காதல்
விளையாட்டுக்கு கிடைத்த கரடிப்பெம்மை நான்தான்போலும்

விளையாடிக்களித்த பின் வீசி எறிந்திட,
வெந்தணலில் வீழ்ந்த புழுவாய் என் மனம் துடித்திட
உன் காதலும் பொய்தானா?
கன்னியர் மனங்களும் புதைமணல்தானா?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-11-11-2023*

# என்னவளே அடி என்னவளே

---





கண்டு மயங்கிய அழகை-குறிஞ்சிமலர்த் தேனாய்
உண்டு களித்த விழிகளில் தேனீயின் ரீங்காரம்
உண்டு சுவை, இதழ் சுவை தேன் என- கயல்விழி
செப்பிடும் மொழியோ காதல் பாசுரம்

வேலோ விழிகள், வில்லோ புருவம்-செவி
மயங்கிட மொழியோ மலைத்தேன்
இதயம் துடித்திட, அழகைக் கண்டு மலைத்தேன்
காதலில் விழுந்தே என்னை மறந்தேன்

வண்டுபடு கூந்தலில் மல்லிகை வாசம்
பொன்மேனியிலோ சந்தனத்தின் சுவாசம்
காளையர் கண்பட்டு வருந்திட-செம்பங்கய
முகக் கன்னியோ காதல் தேசம்

பூவையை கண்ட மனம் தன்னை இழக்க
காதலின் ஈர்ப்புவிசை என்னை மயக்க
நாணமோ பேரழகு, காமன் கணைபட்டு,
கணை பட்ட மானாய் கலங்கும் என் உலகு



கண்டு மயங்கிய அழகில் இதயம் தவிக்க
காதல் புலத்தில் தன்னை இழந்து மனம் துடிக்க
இமைக்க மறந்த விழிகள்-இவளின்றி
வாழ்வில்லை என்ற காதல் நிலைகள்

கண் பார்த்து காதலை நெஞ்செழுத-நாணத்தால்
மண் பார்த்து அன்ன நடைபோடும் பெண்ணோ தோகையழகு
கண்பட்டு, காதலால் புண்பட்டு, நெஞ்சம் வாட
காளையர் மனங்கொத்தும் வேல்விழியாளோ பூஞ்சிட்டு

குவளை விழிகள் பூத்தாட குறுநகையில் முத்துச்சரம்
சுவாசம் மயங்க கார்குழலில் மணக்கும் மல்லிகைச்சரம்
பார்த்த மனதில் காதலின் பூமணம்.
கன்னியோ வாசமலர்களின் நந்தவனம்

கண்டு நெஞ்சங்கள் காதலில் விழ-இரு
மனங்கள் கலந்து இன்பம் பொங்க-இன்றுமுதல்
எமக்கோ நாளும் காதலர் தினம்
பூ வனத்திலோ காதல் குயில்களின் ஓயாத கானம்





பங்கய பூமுகத்தில் குவளை விழிகள்
அங்கனை குமுதவாயில் குறிஞ்சித்தேன் சுனைகள்
கார்குழலில் முல்லைப் பந்தல்-நாணிடும் அழகில்
நானிலப் பூக்கள் பூத்தாடும் அழகின் பேரவை

செம்மொழியோ திருவாசகம்-அன்ன நடையில்
மெட்டி ஒலியோ பெரியாழ்வார் பாசுரம்
கன்னியோ காதலின் நாதஸ்வரம்-கண்பட்டு
காளையர் வருந்த கன்னியோ காதல் சுரம்

கயல் விழியாள் காதல் நோய்தந்து
கனிமொழியாள் மருந்தும் ஈந்து
புன்னகையால் எனை ஆட்கொண்ட
பெருந்தேவி இவள் தானோ?

பார்த்த விழிகள் நெஞ்சில் பரவசம் ஊட்ட, பூத்த முத்துப்
புன்னகை மணமாலை சூட, வளையலும், கொலுசும்
கெட்டி மேளம் கொட்ட, மணநாளாய் மாறிடும் பொழுது.
காதல் வானில் உலாவும், காதலர்க்கு இன்று தேன் நிலவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra -29-09-.2023*

# காலங்களில் அவள் வசந்தம்

---

உன்னோடு வாழ்ந்த காலங்கள் ஒரு கணமாக
உனைப் பிரிந்த நொடியோ பல யுகமாக,
ஈரவிழிகளும், நொருங்கிய இதயமும் என் சொந்தமாக
என்னை வாட்டும் காதற் சோகங்கள்





கார்குழலில் நெய் எழுதி, சேல் விழிகளில் மை எழுதி
காதலால் நெஞ்சில் என்னை எழுதி
கணவனாய் என்னை வரித்த காதல் கங்கை
என் பூவனத்தில் நாளும் பூபாளம் பாடிய தேவமங்கை

கோயிலாய் வீட்டை மாற்றிய குலமகள்
என் வாழ்வில் காதல் பரதத்ததை அரங்கேற்றிய
கோலமயில், காதல் தீபத்தை ஏந்திய தேவதை
கண் மறைந்தாளோ?, விண் சென்றாளோ?

மல்லிகையும், முல்லையும் மணக்க, மதி நுதலில்
குங்குமம் ஜொலிக்க, மணமகளாய் மாலையிட்ட மங்கை
அக்கினியை வலம் வந்து கைத்தலம் எனக்குத் தந்து
வாழ்வை வேள்வியாக்கிய நங்கை

திருத்தலம் நோக்கிய தீரத்த யாத்திரையில்
தன்னை ஆகுதியாக்கி, என்னைத் தந்தையுமாக்கி
பேரின்பம் தந்தவள் பிரிந்து போனாள்-மாலை
வருமுன் காலன் பறித்திட வாடி உதிர்ந்துபோனாள்

வருவதா? போவதா என உயிர்காற்று தள்ளாட
துடிப்பதா? ஓய்வதா என இதயம் திண்டாட-என்னைத்
தாங்கிய ஆலும் விழுந்ததே-என் மனமும்
ஒரு கண்ணாடிபோல் நொருங்கியதே



உன்னில் உலாவிடும் உயிர் மூச்சும் எனதே
உனக்குள் துடிக்கும் இதயமும் எனதே
நீ பிரியும் கணத்தில்-மரணம் உனக்கில்லை
நான் வாழும் கணமெல்லாம் சாவும் உனக்கில்லை

காதல் சாவதில்லை, மண்ணில் உன்னை புதைத்து
நெஞ்சில் நினைவுகளை விதைத்தேன் கண்மணி
கண்ணில் நீர் எழுதாமல்-உன்னைக்
காவியமாய் நெஞ்சில் வடித்தேன் என்தன் பொன்மணி

வாடும் மலர்களை கல்லறையில் சாற்றாமல்-வாடா மலராய்
உன்னை நெஞ்சில் சூடி-தீபங்கள் ஏற்றாமல் என் காதல் தீபமாய்
உன்னை ஏற்றி- தூபங்கள் காட்டாமல்
என் காதல் சுவாசமாய் உன்னைச் சுவாசிக்கின்றேன்

பொன்னை விரும்பும் உலகில்-என்னை விரும்பியவளே தூங்கு
உன் உறக்கம் கலையாதிருக்க கண்மணி பாடுகிறேன்
காதல் தாலாட்டு, மண் மஞ்சத்தில் நீ உறங்க-என்
மனமோ மலர் மஞ்சமோ என் நெஞ்சத்தில் நீ உறங்கு
உன் மஞ்சம் என்றும் நானடி-என் காதல் தஞ்சம் நீயடி



நூற்காத தவத்திற்கும் கேளாத வரத்திற்கும்
இறைவன் தந்த தெய்வீக கொடையே-போதும் என்ற சொல்லால்
வாழ்வை பூவனமாக்கிய தேவதையே-நீ
போனபின் வாழ்வே பாலைவனமான வேதனை

நெஞ்சமே கோயிலாக-அஞ்சுகமே நித்தம் உன்னை
நினைந்திருப்பின்-நித்திலவல்லி, செல்வப் பூங்கோதை
கத்தும் கடலும், கருவான் நிலவும் சாட்சியாக
என் சித்தம் நினைப்பு, செய்கை  உள்ளவரை
என் உள்ளம் உன்னை ஒரு போதும் மறவாதிருப்பேன்

உதிரமே நெய்யாக, உயிரே தீயாக என்னை எரிக்கின்றேன்
உயிர் துடிக்க, சுவாசம் ஒடுங்க ஒரு மெழுகுதிரியாய் உருகுகின்றேன்
ஏதுமில்லா என் உலகில் யாதுமாகி நின்றவளே
போதுமென்ற பொன்மனம் படைத்த தேவதையே

பூஜைக்கு வந்த மலரல்ல நீ-நான் பூஜீக்க இறை தந்த கொடை நீ
உன்னை பிரிந்த பின் உயிர்வாழ்தல் கொடிதடி
நீயில்லா உலகு எனக்கோ நரகமடி-நீ வாழும்
**உலகே என்தன் சொர்க்கமடி**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra - 28.07.2023

# கன்னியின் காதலன்

---

என் சுவாசம் அறியாத இன் சுகந்தமாய் இவன்
என் சுவாசத்தில் வீசும் காதல் புயலுமாய் இவன்,
காணும் பேதெல்லாம் துள்ளிக் குதிக்கும் இதயம்
நாணிச் சிவக்கும் நறுமண மேனியிலோ காதல் பரவசம்





என் இதழ்கள் விரும்பிச் சுவைக்கும் -இன் சுவையாய்
அவன் புன்னகை- இதயத்திலோ என் உயிரைத் தழுவும்
காதல் மின்சாரமாய் அவன் பார்வைகள்
இதுதான் காதலா? என்னைக் கேளாமலே
என் இதயத்தை திருடிய காதல் கள்வன் இவன் தானா?

என் நெஞ்சுக்குள் அவன் மூட்டிய மோக நெருப்பு இதயத்தை தீய்க,
அவன் கண்களைப் பார்த்த விழிகள் இமைக்க மறுக்க,
இரவிலும் கனவிலும்-இவன் எண்ணம் நெஞ்சை நிறைக்க,
இது என்ன மாயம்-நாளும்-அவனை காணத் துடிக்கும் இதயம்,
ஏங்கித் தவித்து மலரத் துடிக்கும் பூ விழிகள் தேடும் உதயம்



அவனைக் காணும்போதெல்லாம்
என் கண்களிலோ துளிர்க்கும் காதலின் இனிப்பு
என் இதயத்தை வாட்டும் இன்பக் காதல் நெருப்பு
முகத்திரை மூடிய விழிகளையும் தாண்டி-என்னை
வீழுத்திய மோகத்திரை-பாதை மறந்த
கன்னி வாழ்வோ நாளும் காதல் யாத்திரை

இவனின்றி எனக்கு வாழ்வில்லை என்று நெஞ்சு தவிக்க-
சொல்லாமல் என் நெஞ்சை திருடிய காதல் கள்வனை
உயிரும் மெய்யும் கண்டு நாணிச் சிவக்க,
என் உள்ளத்திலோ சொல்ல முடியாத பரவசம்-இதயமோ
இவன் இதழ் சுவைக்க தவித்தே புரியும் இன்பத்தவம்.

என் சின்ன இதயத்தை தாக்கும்
காதல் வைரஸ் இவன் கண்கள்தானா?
என் இதயத்துடிப்பை கூட்டும்
காதல் ஹோர்மோன் இவன் புன்னகைதானா?
காணும்போதெல்லாம் நாணத்தால் நான் சிவக்க
கண்களால் அவன் என்னை அணைக்க
என்னையிழந்து இதயம் அவனை தழுவத் துடிக்க
காதல் நோயுற்றே கலங்கும் கன்னி நான்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-21-04-2023*

# காதல் எனும் கனவு

ஏனடி என் நெஞ்சைத் திருடிச் சென்றாய்? அமுதாய் இனித்தவளோ
ஆலகாலமாய் என்னைக் கொல்ல, மலராய்ப் பூத்தவளோ
முள்ளாய் வதைக்க, விடியாத இருளுக்குள் என் இதயம்
விழி நீர்ப்பூக்களோடு நாளும் என் உதயம்.



இதயம்தான் அவளை எண்ணித் துடிக்க,
இரு விழிகளும்தான் கண்ணீர் வடிக்க,-அவளை
மறக்க முடியாமல் திண்டாடும் மனது
மதுவில் மூழ்கித் தள்ளாடும் காதல் உறவு



காதல் கவிபாட வரம் தந்த தேவதையே
சோகக் கவிபாடச் சாபமீந்தாள்,
மோகனம் பாடிய சோடிக்குயிலே-இன்று
முகாரியை அரங்கேற்ற வரம் தந்தாள்.

ஏனடி என் நெஞ்சில் காதலை விதைத்தாய்?
கண்வழி நுழைந்து நெஞ்சினில் முளைத்த காதல் கருகிட,
காதல் மழை மேகமோ எனை விட்டுத் தூர விலகிட
காதலும் கனவானதே கலைந்த கோலமானதே



என் கருவானில் நிலவில்லை-அமாவாசை என்றானது,
என் இதயவீணையில் இசையில்லை தந்தி அறுந்துபோனது
காதல் பூ மலரக், காலைக் கதிராய் வந்தவளே
காரிருள் என்னைச் சூழக் காணாமல் போனாள்



பாடி அழைத்தும்-சோடிக் குயிலிடம் பதிலில்லை,
ஆடி அழைத்தும் தோகையிடம் உறவில்லை
காதல் தவத்திற்கு பிரிவோ சாபம்
என் வாழ்வோ தேவதாஸான பாவம்

ஒளியிழந்தது என் உலகு, நிலவிழந்தது என் வானம்
பொருளிழந்தது என் பாடல்-அன்பே
உன்னை இழந்து அனலில் விழுந்த
புழுப்போல் துடிக்கும் என் மனது

இழந்தபின் தெரிந்தது காதலின் அருமை
பிரிந்தபின் தெரிந்தது தனிமையின் வெறுமை.
காதலும் கனவானது, சோகக் கவிதையானது.

வண்ணப்பூச் சூடும் வனிதை என்னை வாட்ட
ஈரவிழிகளில் வற்றாத கங்கை வெள்ளம் போட
தென்றலாய் வந்தவளே புயலாய் வீழ்த்தினாள்
பூவாய் மலர்ந்தவளே பூகம்பமாய்த் தாக்கினாள்



உன்னைக் காணாத நாளெல்லாம்- நிலவே எனக்கோ அமாவாசை,
உன்னோடு பேசாதபொழுதெல்லாம் நானோ மொழியிழந்த ஊமை
உனக்காய்த் தோற்றத்திலும் மனதில் இன்பம்
உன்னைப்போல் ஒரு காதல் இனியில்லை என்னே துன்பம்?

நேசித்த இதயத்தை நோகடித்தாய், பூஜித்த விழிகளுக்குள்
கங்கையைப் பாய விட்டாய்? -மெய்யாய்
நேசித்த மெய்யே பொய்யாகிப் புழுதியில் வாடிட
என் காதலே ஏனடி என்னைக் கை நெகிழ்ந்தாய்?

உன்னை காணும்போதெல்லாம் இமைக்க மறுக்கும் விழிகள்
துடித்து தவிக்கும் இதயம், தழுவத் துடிக்கும் உயிர்
வற்றிய குளமாய் இன்றோ என் வாழ்வு-
அறு நீர்ப் பறவைபோலானதடி உன்தன் காதல் உறவு?




காதல் விதிகள் இல்லாத புதுக்கவிதைபோலும்
எல்லோரும் எழுதுகிறார்கள்
எதுவும் அமரகாவியமாய் இல்லை.




என் இதயத் துடிப்பில்-இசையாய் அவள் நினைவு
என் சுவாசத்திலோ வாசமாய் அவள் சுகந்தம்
என் சுவாசமும் நீயடி, என் நேசமும் நீயடி
நீயின்றி என் வாழ்வு இன்றோ சூனியமானதடி

தணியாத காதல் தாகம் நெஞ்சை வாட்ட
தெளியாத போதையில் இதயம் தள்ளாட
மங்கையர் காதலும் போதை தரும் மதுவோ?

மதுவும் போதை- மாதும் போதை
மயங்கித் தள்ளாடும் ஆண்களோ சோகக் கீதை
மதுபோதையோ விடியும் வரைக்கும்
மாதர் காதல் போதையோ மடியும் வரைக்கும்?
**பாவம் ஆண்களே, பரிதாபம் ஆண்களே!**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-03-05-2023*

# காதல் மகள்





கண்ணீர்ப் பூக்கள் மலரும் என் இதயவானம்
பூத்துச் சிரிக்க புது மலராய் ஒரு தேன் நிலா
கவலை மேகங்கள் உலவும் என் மன வானில்
வானவில் கோலமிட காதல் மழையின் திருவிழா

கார்மேகம் மூடிய பௌர்ணமியா?
பனித்திரை போர்த்த பவளமல்லிகையா?
முகத்திரைக்குள் முறுவல் சிந்தியது
பாலை நெஞ்சில் பனிமழை பொழிந்தது.

முத்துப் புன்னகை நெஞ்சைக் கொள்ளை கொள்ள,
முல்லை மணம் சுவாசத்தை அள்ள,
கைவளையும் கால் கொலுசும் காதல் சொல்ல,
மையிட்ட விழிகளும், மருதாணி விரல்களும்
என்னைக் கொல்ல, என் வானில் உலா வந்ததோ,
முகத்திரை மறைத்த வெண்ணிலா,
விழியால் மொழிபேசும் காதல் நிலா.

பாலையான நெஞ்சிற்குப் பூவிழிகளால் காதல் மழை
ஊமையான புல்லாங்குழலில்-அவள்
உயிர்க் காற்றால்-கானமழை
புழுதியில் கிடந்த வீணையிலோ காதல்ராகம்
கோடை வாட்டிய நெஞ்சினிலோ புதுவசந்தம்



கார்மேகம் மூடிய வண்ண நிலவால்-
என் வானில் காதல் மழை
பூந்தென்றலாயத் தழுவும் பூ விழிகளால்
நெஞ்சில் ஓயாத காதல் அலை

ஐவேளை தொழுபவளை எவ்வேளையும் மனம் தொழ-
நெஞ்சிலே நாளும் காதல் விழா -மும்தாஜ்,
ஷா ஜகானாய் காதல் வானிலோ காதலர் உலா

கண் பார்த்து நெஞ்செழுதிய ஓவியம்
கவிதைச் சொல்லெடுத்து மனம் எழுதிய காவியம்
நெஞ்சில் நிலைத்து கனவில் வருத்தும் அஜந்த ஓவியம்
காதலனாய் எனை மாற்றிய திவ்வியம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-19-04-2023*

# காதலுக்கு மரியாதை–லைலா மஞ்னு

---

கண் வழி நுழைந்து நெஞ்சுக்குள் புகுந்து காதல் தந்தாள்
காதல் வாசம் சுவாசத்தை நிறைக்க, பூ மணம் இதயத்தில் மணக்க,
புதுச்சுடர் இருளைக் கலைக்க, கனவுகள் எனக்குள் விழிக்க
காதல் தீபத்தை ஏற்றி வைத்தாள்
காதல் மரங்கொத்தி என் மனம் கொத்திப்பார்த்து
நெஞ்சில் காதல் கூடமைத்தாள்.



கனவுகள் பிறந்திட, கவலைகள் மறைந்திட
வண்டும் மலரும் கொண்டாடும் வசந்தவிழா
காதல் கிளிகளாய்ச் சோடி சேர்ந்த உள்ளங்கள்
வானம் பாடிகளாய் பாடி மகிழும் இதயங்கள்

இன்பமாய் வாழ்ந்த நாட்கள், இனிய
கனவாய்க் கலைந்திட,
நெஞ்சிலே காதலின் ஆறாத ரணம்
இதயமோ வாடிக்கருகிய பூவனம்

சுடுமணலில் விழுந்த புழுவாய் நெஞ்சம் துடிக்க
சட்டெரிக்கும் சூரியனாய்ப் பிரிவும் வருத்த
கண்ணில் நிறைந்தவளே கண்மறைந்து போனாள்
நெஞ்சில் நிறைந்தவளே நிம்மதியை எடுத்துச்சென்றாள்.




தேனிலும் இனிதான என் அன்பை
ஏனோ மறந்தாள்- ஏழ் கடலிலும் ஆழமான
என் காதலை ஏனோ துறந்தாள்.

ஏனடி என்னைப் பிரிந்தாய்-
ஏனடி என் நெஞ்சில் காதலை விதைத்தாய்?
மறக்க துடித்தும் முடியவில்லை-உறவைப்
பிரிக்க முனைந்தும் முடியவில்லை

செவ்வரி படர்ந்த விழிகளில் நீர் மலர்கள் பூத்திருக்க
செங்கமல முகத்தில்-சோகப் படர்தாமரைாய்
கருந்தாடி மூடிக்கிடக்க, பாலை மணலில் வீழ்ந்து கிடந்தான்
பட்ட மரமாய் வாடிக்கிடந்தான்- மஜ்னு

எல்லாம் மாயை தானோ-ஏழை மஜ்னுவின்
காதலும் வீணா? புலம்பி அழும் மனம்



பொன்மேனி தொட்டபோது, கன்னம் சிவக்க,
கருவிழிகள் நாணிக்கிறங்க, கட்டிக்கொள் என்னை
கட்டிக் கரும்பாய் கடித்துக் சுவை-பஞ்சைப்
பற்றிய நெருப்பாய் படர்ந்து என்னை எரித்துக்கொல்
பழரச மதுவை இதழ்களில் பருகிக் கொள்-என
நாணி அபிநயம் காட்டும் நீலநயனங்கள்

காதல் தீயில் மெய்யும் கருக, எரியும் மெழுகாய் இதயம் உருக
துடித்து களைக்காத இதயம்-அவளை நினைத்துக் களைக்க
அணைத்து மகிழ்ந்த மெய்யும் அனலில் பட்ட மெழுகாய் வெந்து உருக
தூக்கம் மறந்த விழிகள் துக்கித்து கண்ணீர் வடிக்க
ஏங்கித் தவிக்கும் இதயம் பெருமூச்சில் ஆவியாய்க் கரைய
ஏனடி என்னை மறந்தாய்?

மலர்சூடும் மாதே, என் மனவானின் முழுநிலவே
நீயின்றி காயும் என் வானம் காரிருளாய்ப் போனதடி
மலர்த்தேனின்றி- காதல் பூந்தேனி பசியால் வாடுதடி

ஒவ்வொரு துடிப்பிலும்-இதயம் தவிக்க
ஓவ்வவொரு பெருமூச்சும் அனலைப் பொழிய
கனவால் மலர்ந்த இரவும், கண்ணீரால் ஈரமான மஞ்சமும்
என் காதலைச் சொல்ல ஏனடி என் நெஞ்சில் மலர்ந்தாய்?




காதலுக்கு மொழி ஏது ? மதமேது?
கண்பார்த்து நெஞ்செழுதிய காதல்
கண்ணீர்க் காவியமோ? குருதி வரைந்த ஓவியமோ?

உனக்காய் பூத்த இதயம் வாடிக் களைக்க
நெஞ்சை நிறைத்த நேசம் துடித்துத் தவிக்க
இரு விழிகளும் கண்ணீர் சிந்திச் சிவக்க
ஏனடி இந்தச் சோதனை, மாறாத வேதனை?

மறவாதே என்றவளே என்னை மறந்து போனாள்
பிரியாதே என்றவளே என்னைப் பிரிந்து போனாள்-
நினைக்கத் தெரிந்த மனதிற்கு மறக்கத் தெரியவில்லை
வான் நிலவை காணும்போது -மனமும் நோகும்
வண்ண மலர்களை பார்க்கும் போது விழிகளில்
கண்ணீர்ப் பூக்கள் உதிரும்

ஒற்றைக் குயிலாய் இதயம் கரைந்து உயிரை வதைக்க
உன்னை பிரிந்தபோது உயிரை பிரிந்து வாடும் துயரம்
ஆணி வேரறுந்த மரமாய்ச் சாகும் அவலம்

அன்பே லைலா நீ எங்கே? என் நெஞ்சம் உனக்காய் அலைய
நிம்மதியோ என்னை விட்ட அகல ஏனடி என்னைப் பிரிந்தாய்?
தகிக்கும் சுடுமணலில் தள்ளாடி நடந்து விழுந்து, எழுந்து
மண்ணை முத்தமிட்டு, இது லைலா வாழும் நகரம்
லைலை நடந்த பூமி , புலம்பும் மஜ்னுவை
மன்னனும் கண்டே மனமிளகி நின்றான்.



காதல் தோல்வியால் கலங்கி அழுகிறான் காளை
மன்னனுக்கு மந்திரி பதில் கூற,
கன்னி ஒருத்திக்காய் வாடும் காளை கண்டு
காவலனும் வியப்பிலாழ்ந்திட
பெண்ணுக்காய் புலம்பும் பேதையை
அழைத்து வாருங்கள் என்றான் அரசன்

மண்ணுக்காய், பொன்னுக்காய், மணிமுடிக்காய் போரிட்ட
மன்னர்கள் உண்டு, பெண்ணுக்காய் புலம்பியழும்
பேதை கண்டு வியந்தவனும் நகைத்தே
“மதுவின் போதை நாமறிவோம்
அழகு மங்கையர் போதையும் நாமறிவோம்

ஒரு மாதிற்காய் புலம்பும் பேதையே
ஒரு மங்கைக்காகவா இந்தக் கண்ணீர்?
ஒரு மடந்தைக்காகவோ இந்தப் பைத்தியக்கோலம்

அழகு மங்கையர் கூட்டம் சூழ நகைத்த மன்னன்
“மஜ்னு பெண்தானே வேண்டும்
என்னை சூழ்ந்த நிற்கும் பேரழகிகளில்
ஒருத்தியை தருகிறேன் பெற்றுக்கொள்”

வரிசையாய் நின்ற அழகிகள் எல்லாம்
வடிவிற்கு இலக்கணம் சொல்லி வானவில்லின் வண்ணம் காட்ட
அடி தொட்டு முடிவரை அழகைச் சொல்ல
ஆணிப்பொன்மேனியும், அழகு நடையும், பொங்கிய அழகில்
பூரித்த மார்புகளும், கார்குழலும், கருவிழிகளும்
சிற்றிடையும், செம்பவள இதழ்களும், முத்துப்பற்களும்,
மோகன சிரிப்பும் கண்டே ஆடவர் மனமும் ஆட்டம் காண
விழிகளுக்கோ அழகின் விருந்தோம்பல்
வியந்து நின்ற கவிகளின் புலமைக்கோ அழகின் அறைகூவல்

விழிபட்டு சிவந்தனவும், மொழிகேட்டு கனிந்தனவுமாய்
கன்னியர் அழகு கண்களை மயக்கி நெஞ்சங்களைக் கொல்ல
கண்டவர் சிந்தையிலே காமனும் குதூகலிக்க

பார்த்தவர் மீண்டும் பார்க்கத் தூண்டும் அழகையும்
பாராதவனாய் என் லைலா வேண்டும்
என் லைலா வேண்டும் அழுது புலம்பினான்
அழகைக் கடந்த அழகிய காதலன் மஜ்னு

அசந்த மன்னனும் அழகிலும் அழகோ உன் லைலா
அசத்தும் பேரழகோ-ஆச்சரியம்? அவளைக் காணவேண்டும்
கண்கள் அழகைப் பருகவேண்டும் கட்டளை பிறக்க படைகள் பறக்க
பாவையும் தோன்றினாள் பார்த்தீபன் அவையில்.

பார்த்தவர் இகழ்ந்திடப் பார்த்தீபனும் திகைத்திட
உச்சி முதல் பாதம் வரை அணங்கிடம்
அழகெனச் சொல்ல ஏதுமில்லை- விழி கோண
மொழி குளறத் தேய் பிறை நிலாவாய் அவள்

சுந்தரியல்ல, மோகினியல்ல அழகினைச் சொல்ல
தேன்மோழியல்ல, தேவதையல்ல,
மேனி காஞ்சனமல்ல, விழிகள் கயல்களுமல்ல
கனிரசம் பருக இதழ் கோவையும் அல்ல



பார்வையால் அளந்தவன் பாவையின்
அழகால் நிலைகுழைந்து கேட்டான்
மஜ்னு இவளா உன் காதலி-இவளுக்காகவா
இத்தனை அழுகை, வேதனை, புலம்பல்?

பார்த்த விழிகள் பழரசமாய்ப் பாவையைச் சுவைக்க
பருகிய இதயமும் காதல் போதையில் மிதக்க
இமைக்க மறந்து இமைகளும் இன்பத்தில் திளைக்க
கானக் குயில்களாய் இதயங்கள் கானமிசைக்க
மெய் மறந்து நின்ற காதலர் கண்டு, கண் வியந்த காவலன்

மன்னவன் கேள்வியால் புன்னகை மலர
மன்னவனே மாதர் மேனி சுகம் தாங்கள் அறிவீர்
மாதர் மனம் கவர் காதலனாய் வாழ்ந்திருந்தால்
காதலின் சுகம் நீரும் அறிந்திருப்பீர்

காமத்தை அறிந்த நீங்கள் காதலை அறியீர்-மன்னா
மஜ்னுவின் காதலைப் புரிய மஜ்னுவின் இதயம் வேண்டும்
காதலைப் புரிய காதலில் விழவேண்டும்
பிரிந்து தவிக்க வேண்டும், இன்புற ஊடல் வேண்டும்
காதல் இதயம் சார்ந்தது -உடல் கடந்த லைலாவின்
அழகைக் காண மஜ்னுவின் காதல் இதயம் வேண்டும்

அரசிருந்தும், அழகு மங்கையர் இருந்தும். காதலை நீங்கள்
அறியாத பரிதாபம், காதலே, காதலை அறியும் -காவலனே
காதலோ வரம், காமமோ சாபம், மன்னவன் நீங்கள்,
மாதரசி மனதிற்கு ஏழை நானோ காதல் மன்னவன்!

மெய் சாாந்த அழகே நீங்கள் காண்பது
உயிர் சார்ந்த அன்போ இதயம் காணும் காதல் என்பது
காதலருக்கே காதல் வரம்-காமத்திற்கு
காதல் கிட்டாத அறம் மன்னா

மண்ணரசைக் கைப்பற்ற பெரும் படைபோதும்-மாதரசிகள்
பூ மனதைக் கைப்பற்றக் காதல் இதயம் வேண்டும் மன்னா
காதல் இரு இதயங்களின் சங்கமம்
காமம் இரு உடல்கள் கூடும் பாலுணர்வின் பங்கம்

கவர்ச்சியின் பாதையில் காதல் இல்லை, ஊடலின் இன்பமில்லை
ஒருவர் ஒருவருக்காய் உருகிக்கரையும் இன்பத் தவிப்பில்லை
மதுவுண்டு, மாதர் சுகம் கொள்ளும் போதை காமுகருக்கே
உள்ளம் கரைந்து உள்ளம் கொள்ளைபோகும்
இன்பம் காதலுக்கே-காவலனாயிருந்தும்
காதல் இன்பமறியாத ஏழை நீ மன்னா-ஏழையாயிருந்தும்-
காதலர் உலகில் பெருஞ் செல்வன் நான் மன்னா

காதலைச் சுவைத்த இதயம்
வானவர் அமுதைச் சுவைத்த இன்பம் கொள்ள
மன்னவனும் தன் மனவெறுமை அறிந்து
காதலுக்கு மரியாதை செய்தான்.

மரணமும் எம்மைப் பிரிக்காது-மண்ணுக்குள் எம்மை
உயிரோடு புதைத்தாலும் மனதுக்குள் வாழும் காதல் மடியாது
காதலுக்கு ஏது மரணம்-காதலருக்கே மரணம்
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-18-05-2023*



# மன்னிக்க வேண்டுகிறேன்

---






கொல்லும் உன் மௌனத்தால்-காதலே
கோடையில் காயும் பூவானேன்-கார்முகிலாய்
அள்ளிச் சொரிந்த உன் அன்பு மழையின்றி
வற்றும் நதியும்- வாடும் பயிருமானேன்,
காதலே மன்னிக்க வேண்டுகிறேன்

தினம், தினம் உன் அன்பு மழையில் நனைய
மனம் உன்னை யாசிக்கின்றது.
மனத்துயரமெல்லாம் நீங்கிட காதலே
உன் தாய் மடிக்காய்த் தவமாய்த் தவமிருக்கின்றது.

நீரின்றி வாடும் நீலோற்றபலமாய் உள்ளம்
நின் அன்பின்றி வாடத், தேனின்றி வாடிடும்
பூங்குருவியாய் மனம் வெதும்பிட
ஏனடி இந்தப் புரயிா மௌனம்?

உன் விழிபார்க்கும் தூரத்தில் நானிருந்தும்,
உன் விழிகளிலோ என்னை காணாத வெறுமை
என் செவி கேட்கும் இடத்தில் நீயிருந்தும்,
உன் கனிமொழி கேளாத துயரம்



கோடையில் காயும் பாலையாய் நெஞ்சு கொதித்திட
கொளுகொம்பின்றித் தவிக்கும் முல்லையாய் நெஞ்சு தவித்திட
என் காதல் கொடி படர வள்ளல் -பாரியே
உன் கன்னி இதயத்தை கனிவாயத் தருவாயா?



கண்மணி ஒரு புன்னகை மட்டும் காட்டடி
என் காதல் காயங்கள் ஆறும்
ஒரு பார்வையால் என் நெஞ்சைத் தழுவடி
பூங்கொடி, என் காதல் வேதனை தீரும்
காதலின் வேதனையை என் காதலே-நீ அறிவாய்-
கண்களில் நீர் சொரிய வேண்டுகின்றேன்
காதலே என்னை மன்னிப்பாயா?

கன்னி மகளே காதல் பூவாய் என்னைச் சூடிக்கொள்ளாயோ?
என் புள்ளிக்குயிலே என் சோடிக்குயிலாய்-இணைந்து
பாடி மகிழ்வாயா? கன்னி மயிலே
உந்தன் கலாப மயிலோடு ஆடிக் களிப்பாயா?



பார்வையால் ஏனும் என்னைத் தழுவிச் சொல்லடி பார்வதி
நான்தான் உன் காதல் என்று
ஒரு சாடையால் ஏனும் என்னைத் தேற்றடி
நீதான் என் தேவதாஸ் என்று.

பிரியமானவளே என்னைப் பிரியாதே
உன் பிரிவென்பது என் இறப்பென்று நீ அறிவாயா?
சொல்லடி என் காதல் கண்மணி.



நெய்யின்றி அணையும் விளக்கானது என் நெஞ்சம்
நீயின்றித் தீக்கும் எரிநரகானது என் பூ மஞ்சம்
நீரின்றி வாடும் பூவானது உள்ளம்
விழிகளிலோ மடையுடைத்த கண்ணீர வெள்ளம்

கன்னியர் காதலும் பொன் மானோ?
நீரோடை தேடும் கலைமானாய் மனம் ஏங்கி
ஏமாறக் கானல் நீரோ?

உன் வில்லைகளின் குவியத் தூரத்திற்குள்
அனலில் விழுந்த விழுந்து துடிக்கும்
என் இதயத்தைப் பாரடி
முல்லைச் சிரிப்பால் ஒரு மொழி சொல்லடி

உன் இதயத் துடிப்பிலோ ஒலிக்கும் முகாரி
என் இதயச் சோகமடி- கண்ணால் ஏனும்
காதல் சொல்லடி என் கண்மணி-
காதல் காயங்கள் ஆறும் என் பொன்மணி

உன் வில்லைக்குள் நீந்துவது விழிகளல்ல-வேல்கள்-
விழுத்தியது மானை அல்ல காதலி-என் மனதை

பொட்டு வைத்தாய், பூங்குழலில் பூ வைத்தாய்
குமுத வாயில் அமுதப் புன்னகை வைத்தாய்
குவளை விழிகளில் குறுநகை வைத்தாய்-ஏனடி
பூ நெஞ்சில் என் காதலை வைக்க மறந்தாய்.?
***நெஞ்சு வலிக்குதடி***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-22-04-2023*

# மறவாத காதல் மனம்

---

செந்தாமரை முகத்திலோ கதிரைக் காணாத தவிப்பு
செந்தேன் இதழிகளிலோ பூந்தேனி அமராத தவிப்பூ
பூமாலை சூடிய பொன் கழுத்தில்-ஆண்டாளே
சூடிக் கொடுத்த மலர்மாலையாய் என்னைச்
சூடாயோ எனும் தவிப்பு





மையணிந்த கயல்கள்-மயங்கி உயிர்வருத்தும் காதல் சொல்ல,
கையணிந்த வளையல்கள் சிணுங்கி மெய்யணைத்துக்
கையணை கட்டக் கெஞ்ச, முகம் மலர்ந்த
நாணச் சிவப்போ-முற்றி செவ்வாய்யிதழ்களுக்கு
செம்மை கூட்ட கலங்கி நின்றாள் பூவை

அகமணிந்த காதல் அணியோ-விழிவழியே
என்னைச் சூடிக்கொள் சேதி சொல்ல ஆடி வந்தாள்,
என் காதல் நெஞ்சை தன் நெஞ்சால் களவாடி உறவாட
என்னை நாடி வந்தாள் நான் மயங்கும் பாவை
எனை மயக்கிடும் பேரழகுப்பூவை.

காதல் என்பது இதயத்தின் மொழி
என் கவிதையோ உன் இதயத்துடிப்பொலி
என் உதயம் என்பதோ -அழகே உன் முக ஒளி
என்றும் நீயே என் காதல் வானின் வான்மதி

வானமுதே, தேன் மொழியே என் வாழ்வின் உயிர் மூச்சே
பருவங்கள் மாறினாலும், துருவங்கள் இடம் பெயர்ந்தாலும்
என் இதயக்கோயிலின் காதல் தேவதை என்றும் நீயடி கண்மணி

உயிரே உனை நினைப்பதற்கு ஒரு நொடிபோதுமடி
உன்னை மறப்பதற்கோ பல கோடி யுகங்கள் வேண்டுமடி
உனை நான் நினைப்பதில்லை- காதலி -ஏனெனில்
உன்னை நான் மறப்பதில்லை

நீ சூடும் மணமாலை நானடி-ஆண்டாளே
என்னைப் பூவாய் சூடும் பூங்குழலி நீயடி
மகிழ்ந்து கானக்குயிலே இணைந்து என்னோடு பாடடி
என்றும் பிரியாத சோடிக்குயில்கள் நாமடி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-04-2023*

# மும்தாஜ் மஹால்

---

இதயத்திலோ, இமயத்தைச் சுமந்திடும் கனம்
இரு விழிகளிலும் கங்கை வடியும் ரணம்
உயிர் மூச்சினிலோ அனல்காற்றின் ஆலாபனம்
மும்தாஜே-என் உயிர்க்காதலே உனைப் பிரிந்தபின்-
என் உலகோ அணையாச் நெருப்பெரியும் சூரிய வனம்





உன் பூமேனி தழுவாதபோதெல்லாம் தேகமோ தீ குளிக்கும்-
குமுத வாயில் அமுதம் சுவைக்காதபோதெல்லாம்-
நா வரண்டு நெஞ்சு விடாய்க்கும்

உன்னை காணாதபோதெல்லாம்-நெஞ்சில்
நீர் தேடும் கலைமானின் ஏக்கம்
கண்டபின்னரோ காதற்கிளிகளின் விழாக்கோலம்
ஜோடிக் குயில்களின் கானம்



நிலவே நீயின்றி என் நெஞ்சிலோ நித்தம் அமாவாசை
நீ கண்ணயர்ந்த மஞ்சத்திலோ மௌனித்த
எம்தன் காதல் இசை

கனிரசமாய்ச் செவ்வாயிதழ் “கள்” சுவையும் இனிக்க
சொல்லும் மொழியும் காவியமாய் ஒலிக்க,
கால் கொலுசுகளின் இன்னிசையில் இராகமாலிகை சிலிர்க்க
முல்லையும், மல்லிகையும் பூமேனி வாசம்
மும்தாஜே! என் அன்பே நீதான் என்தன் காதல் தேசம்

மையெழுதிய விழிகள் காமன் கணைகளாய் மயக்க
மெட்டியும், மேகலையும் மோகனராகம் இசைக்க-அன்றில்
பறவைகளாய்க் கூடிக் களித்திடக் காதல் தந்தவள் கண்ணயர்ந்தாள்
காதலன் தன் தூக்கத்தை மறந்து துக்கத்தில் நிலைத்தான்

இதயம் கண்ணாடிபோல் நொருங்கிட-நூலறுந்த காற்றாடியாய்
மனம் புழுதியில் புரண்டிட-இதயராகம் இசைத்தவள்
மீளாத்துயில் கொண்டாள்-எரி நரகில் நான் வாழ
என் காதல் மகாராணி வானுலகில் குடி கொண்டாள்

அன்பே, நீயின்றி என் வாழ்வே எரி நரகானது
அரியணையும் சிறையாகி,
மணிமுடியும் என்க்குச் சுமையானது

மண்ணும், பொன்னும் போகமும் இருந்தும்
நீயில்லா உலகோ எனக்கு நிலவில்லா வானம்
கண்ணில் தெரியும் வண்ண மலர்களும்-நீ போன பின்
தேன் தும்பி எனக்கு காகிதப் பூக்களான அவலம்



காதல் மலராய் என்னைச் சூடி, கவிக்குயிலாய் இசைபாடி
பூந்தென்றலாய் என்னைத் தழுவி, இதயமாய்த் துடித்து,
உதிரமாய் ஓடி, உயிர்காற்றாய் என்னுள் உலாவி,
உணர்வாய் என்னுள் பரவிக் கிடந்தவளே-ஏனடி
இரவு வருமுன் கலையாத இந்த தூக்கம்
என் நெஞ்சினிலோ கனக்கும் சுமையாய்த் துக்கம்.

என்னுயிரே மும்தாஜே!-உன் பொன்னுடலை
விதைத்த மண்ணை திருமண்ணாய் நெஞ்சில் பூசி
கண்மணியே நீ கண்ணயரக் கட்டிவைத்தேன்
காதல் மாளிகையாய் மும்தாஜ் மஹாலை.



கண்மணியே கண்ணுறங்கு
விண்ணும், மண்ணும் உள்ளவரை பிரியமே
நம் காதலுக்கு இது மாட்சியடி.

கண்பார்த்து நெஞ்செழுதிய அன்புக்காவியமே
விண்ணில் நீயும் எனக்காய் ஏங்கிட
உன் மன்னவனோ மாதுயரில் மூழ்கிட
என்னவளே-இனியவளே
உன்னோடு கழித்த ஒவ்வொரு நொடியும்
கோடி வசந்தங்களடி-இன்றோ
உனைப் பிரிந்து வாடும் ஒவ்வொரு கணமும்
எரிநரகில்  வாழும் பல யுகங்களடி



உன் பொன்மேனியைத்-தீயோ, மண்ணோ தீண்டிடாமல்
காத்திட அமைத்தேன் அழகு தாஜ்மஹாலை.-
உன் காதல் நெஞ்சில் வாழ-காதல் கைதியாய் -நான்
ஆயுள் சிறையிருப்பேன் என் கண்மணியே நீயுறங்கு

அஞ்சுகமே என் அருஞ்சுகமே-மண்ணுக்குள்
உன் பூமேனி மறைந்தாலும்- என் மனதுக்குள்
உன் காதல் என்றும் மாறாது மறையாது-
விண்ணேகி நான் வந்து உன்னைச் சேரும் வரை
கண்மணியே, என் காதல் பைங்கிளியே-
என் காதல் மாறாது மறையாது
கண்மணியே கண்ணுறங்கு



விண்மீன்களும், வெண்மதியும் கூடி விளையாடும்
வான் வெளியில்-கண்மணியே  உன்னோடு
கைகோர்த்து உலாவர-மன்னவன் நானும்-
விண்ணேகும் நாளிற்காய்த் தவமயாத் தவமிருப்பேன்-

கண்ணே! கள்ளிருக்கும் மலரும் கவிதைச்
சுவையிருக்கும் தமிழும் உள்ளவரை
என் உள்ளிருக்கும் காதல்- சாகாது
சத்தியமாய் ஒரு போதும் உனை மறவாது

ஒருவரியாய் என்னோடு இணைந்து-இரு வரித்
திருகுறளாய் என் வாழ்வை மாற்றிய-வாசுகியே
என் வாழ்விற்கு-பொருள் கொடுத்த அறத்துப்பால்-நீ
வற்றாத அன்பின் நிதிக்குவையான பொருட்பால் நீ
என்றும் இன்பம் தரும் காதற்பால்-நீ

முப்பாலாய் என்னள் கலந்து-வாழ்வை
தித்திப்பால் நிறைத்தவளே-தேனே
அப்பால் நீ போனபின்-என் வாழ்வோ
வேம்பாயக் கசக்குதடி



இருவரிக் குறளாய் இணைந்து மகிழ்ந்திருந்தோம்
அன்பே, உன் பிரிவால்-ஒருவரியாய்ப்
பொருளிழந்து அரை நிர்வாணி போலானேன்.

அர்த்த நாரிஸ்வரராய்
ஒன்றினைந்து மகிழ்ந்திருந்தோம்-இன்று
அண்ணகன் போலானேன்.

என் காதல் தேவதையே-நீயின்றி
என் இதயக்கோயில் பாழ்பட
நாடிழந்து, வீடிழந்து-கைதியாய்
கண்ணீரில் வாடுகிறான்-உன் காதலன்

ஐவேளை தொழுத மனம்- இனி எவ்வேளையும்
அல்லாவைத் தொழுதே உனக்காய்த் துவா கேட்கும்,
க:.பாவை சுற்றி வந்து  -ஹாஜியான உள்ளம்
உன் சமாதியை சுற்றி வந்து -கண்ணீரால் வுழு செய்து
நம் காதலை வாழ வைக்கும்

வருடத்தில் ஒருமுறை நோற்கும் ரமழான் நோன்பும்-இனி
வாழ்நாள் எல்லாம் உனக்காய்த் தொடர
எஞ்சிய என் வாழ்நாள் எல்லாம் ரமழானாக
நீயே என் பேரன்பு, உன் நினைவே என் பெருநோன்பு



என் காதலின் அட்சய பாத்திரமே-நீ போனபின்
காதல் மலரின்றி வாடும் தேன்தும்பி நான்
என் காதலின் கற்பக தருவே -நீ மடிந்திட
என் நெஞ்சம் வேரும், விழுதுமின்றிச் சாய்ந்ததடி

சுழலும் புவியும், அலையும் கடலும் திசைமாறினும்
பாடும் குயிலும், இரையும் சங்கும் ஓயினும்
உன்னைச் சுற்றிச் சுழலும் என் இதயமும்
உன்னைப் பற்றி பாடும் என் உயிரும்-இனியவளே,
என்னுயிர்க் காதலே மும்தாஜே-உன்னை
ஒருபோதும் மறவாது.



தாஜ்மஹால் இது கல்லறையல்ல-காதல் கோயில்
இது கல்லும் உளியும் தீட்டிய கற்சிலையல்ல
இதயமும் உணர்வும் எழுதிய அமரகாவியம்
இது விசுவகர்மாவின் வேலைப்படல்ல
காதல் இதயங்களின் அழியாத கோலம்



இது கலைப்படைப்பல்ல ஷாஜகானின் காதல் வேதம்
இது விரல்களும் வீணையும் மீட்டிய இசைக்கோலமல்ல
காதலின் தேவராகம்- அமரகாதலின் புது வேதம்

இது மண்ணில் மலர்ந்த- பளிங்கின் அற்புத வியப்பல்ல-
இறந்தும் காலத்தால் அழியாத தெய்வீகக் காதலின்- புத்துயிர்ப்பூ
இது மயானபூமியல்ல -காதலின் தியானபீடம்

இது படித்துச் சுவைக்க காவியம்
பார்த்து இரசிக்க ஓவியம்-எம் காதலைச் சொல்லும்
காலத்தால் அழியாத பளிங்குச் சிற்பம்

***மானுடரே காதல் செய்வீர்-காதலே அன்பின் வேதம்***
***காதலில்லாத வாழ்வோ சாவின் நாதம்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-04-2023*

# முதற் காதல்

---





வண்ண நிலவோ கண்களை மயக்க
வாசத்தென்றலோ சுவாசத்தை நிறைக்க
விண்ணில் விந்தையாய் விரியும் பேரழகு
சிந்தையை மயக்க-
பேரானந்தமோ நெஞ்சை நிறைக்க
தனிமையோ என்னை ஆட்டிப்படைக்க
இனிக்கும் இரவினில்
இதயம் இறைவனை வேண்டியது.

தந்தையே! இதுவரைக் காதலை அறியேன்
கற்றதெல்லாம் நூல்களில்
கவிஞர் காவியங்களில், சினிமாவில்
நானும் காதல் வயப்படவேண்டும்
நெஞ்சுருகி ஒருத்தியை நேசிக்க வேண்டும்

இதயம் உடைந்து நொருங்கி சோகக் கடலில் மூழ்கிட
காதலின் வேதனையை அறியவேண்டும்
காதல் சிலுவையை இதயம் சுமக்க வேண்டும்

ஏனோ இந்த விபரீத வரத்தை மனம் விரும்பி வேண்டிட
நான் அறியாத காதல் அனுபவத்தை அறிந்து தெளிந்திட
இறைவனை வேண்டினேன்
தேவதாஸீம், மஜ்னுவும் பட்ட துன்பம்
நானும் பட காதலை யாசித்தேன்,



என் நெஞ்சிலே இன்றும் காதலின் ஆறாத ரணங்கள்
இதயத்திலோ ஒற்றை குயிலின் ஓயாத சோக கானங்கள்
என் காதல் பூ வனமோ பாலையானது
என் கவிதைச் சோலையோ கானல் நீரானது

அலை அலையாய் எழுந்து விழும் மனம் அவள் மடிக்கரை தேடும்
காயும் நிலவும், கரையும் குயில்களும் என் காதலைச் சொல்ல
மலரளந்த மதுமலர் கூந்தலும், மயக்கும் முறுவலும் கனவிலும்,
நினைவிலும் மனதை கொல்ல, நேசத்தால் விம்மும் நெஞ்சம்
நிம்மதி இழந்து சோகத்தால் தவிக்க என் காதலும் பொய்யாய்
கனவாய், பழங்கதையாய் போனதே
என் வேண்டுதலும் இறை தந்த வரமானது
காதல் எனக்கு அன்பின் புதிய பரிமாணத்தை
அனுபூதியில் கற்றுத் தந்த ஆசானானது

தென்றலாய் வந்து, தேவதைபோல்
வீட்டில் உலாவி, உறவாடிக் கதைபேசி
குறுநகையால் நட்பாகிச், சித்தனாய் வாழ்ந்தவனை
காதல் பித்தானாய் மாற்றி மறைந்தவள்
மனதை கொட்டிக் கடிதம் எழுதினாள்



“மண்ணில் புதையுண்ட வைரமாய் நீங்கள்
கன்னியர் எவரும் உங்களை -இன்னும் காணாதது-ஆச்சரியம்
கண்டால் உங்களை கவர்ந்து செல்வார்-காதல் எனும்
பொன் விலங்கிட்டுப், பூ இதயத்தைக் களவாடிச் செல்வார்

என் இதயமோ உங்களை கண்டதும்
தன்னை மறந்து போனது
உங்களோடு எல்லாவற்றையும்
பகிர்ந்திட ஆவல்-அதிலும் என் இதயத்தை?



எனக்குப் புரியாத மொழி, ஒரு பெண்ணின் இதய ஒலி
கானமாய்க், கவிதையாய் மலர்ந்த மடலை
படித்த தோழி சொன்னார் இது காதல்

பெண்மனம் பெண்ணுக்கே புரியும்
உங்களை விரும்பிடும் பெண்-அவள்
உள்ளத்தை உடைக்காதீர்கள்
உங்கள் காதலைச் சொல்லுங்கள்

காதலான உள்ளம்-களித்து இறக்கை விரித்து வானில் பறக்க
கவிதை பாடும் நெஞ்சம் வானம்பாடியாய் சிந்து பாடிக்களிக்க
கனவுகளில் வானவில்லின் வண்ணங்கள்
மனதிலே மலைத்தேனாய் எண்ணங்கள்.



இதுதான் காதலா? ஆண்டாளின் பாசுரமா?
காதல் அறியாத மனதில் பூ மழை பொழிய
நிலவும், மலரும் அவள் முகம் காட்ட
இரவும், பகலும் நினைத்து நெஞ்சம் உருக
நெஞ்சுக்குள்ளே பொங்கும் புது வெள்ளம்
நினைவுகளில் கம்பனும், காளிதாஸனும்
காதல் கவி பாடும் எண்ணம்.

மடலுக்கு மடல் வரைய மங்கைக்கு
நான் எழுதும் முதல் கடிதம்
மனதில் உள்ளதெல்லாம் கவிதையாய் வடிய
இனம்புரியாத இன்பம் இதயத்தை நிறைக்க
உமாபதியாய் மாறி உள்ளம் ஆடிய சிவதாண்டவம்.

நீண்ட நாட்கள் களித்து, பதில் மடல் வந்தது
"என கடிதம் சொன்னது காதல் அல்ல
உங்கள் மேல் கொண்ட கௌரவம்
என் மடல் உங்கள் மனதை (ஏ)மாற்றியிருந்தால்
மன்னியுங்கள்-பெண் உள்ளம் புரியாத
குழந்தையாய் இன்னும் நீங்கள், பாவம்."



கன்னியின் வார்த்தைகள் என்னைக் கழுவில் ஏற்றக்-
காதல் மனமோகண்ணாடிபோல் நொருங்கிச் சிதறிட
அனலில் விழுந்த புழுவாய்த் தவித்து
தரையில் விழுந்த மீனாயத் துடிக்கும் இதயம்



புயலும், பூகம்பம் ஒன்றாய்ப் பூ மனதை சிதைக்க
புதைமணலில் விழுந்த புள்ளிமானாய் மனம் தவிக்க
என் காதல் சொர்கமே எரி நரகானது
சோகமே என்றும் என் சொந்தமானது.

அமுதாய் இனித்த காதல் ஆலகாலமானது
இதயம் சுவைத்த முதற் காதல் கனியும்
இறைவன் விலக்கிய அறிவுக்கனியாய் ஆனது
மலரும் முள்ளாகிட, கனியும் கல்லாகிட
மனமோ தீக்குளித்தது



அடிமை கொள்ளும் உறவல்ல காதல்
ஆனந்தச் சுதந்திரமளிக்கும் உறவு
காதல் அன்பின் ஐக்கியம்-***காதலில்***
***காதலிதான் முக்கியம்***

ஒருத்தியை மனதார விரும்பி, உயிரும். உள்ளமும் உருகி
ஒரு தலைக் காதலில் வீழ்ந்தாலும்
கடவுள் தந்தது காதல் வரமே



செடியில் இருக்கும் சுதந்திரம் மலருக்கு,
அழகை இரசிப்பதறக், மலரைப் பறிப்பது வன்முறையே
என் காதலும் அப்படியே

எங்கிருந்தாலும் வாழ்க என்று மனம் பாட
இமயச் சோகத்தால் மனம் தள்ளாட
மண்ணில் நடந்தவனை-கணப்பொழுது
விண்ணில் பறக்கவிட்டாள்-
சிறகொடிந்து சோகச் சகதியில் விழ,
காதலை புறக்கணித்தாள்-தேவதாஸாய்
கண்ணீரில் அலையவிட்டாள் பார்வதி

கேட்ட வரம் கிடைத்திட காதல்
வரமா, சாபமா என மனம் வினவித் துடித்திட
துன்பமும் இன்பமும் மனதை பண்படுத்த
காதலை அறிந்து கொண்டேன்,கடவுளுக்கு நன்றி சொன்னேன்

இன்னும் நான் அவளைக் காணவில்லை
இனியவளோ நினவில் உண்டு ஆனால் நெஞ்சில் இல்லை
இரு பிள்ளைகளின் தாயோ இன்னொருவர் மனைவி
தனிமையே என் வாழ்வின் நியதி?



காதலால் காயமான மனசு-காலத்தால் ஆறிட
வாழ்வில்தான் வானமாய்-பெருவரமாய்
இறைவன் தந்த பேரமைதி




காதலை அறியாத வாழ்வும் வாழ்வல்ல
காதலில்லாத வாழ்வும் வாழ்வல்ல
அன்பின் அழகிய பரிமானம்-
இரு இதயங்கள் ஒன்றிணையும் பரிணாமம் காதல்

கண்பார்த்து நெஞ்செழுதிய காவியம்
மனம் மகிழ்ந்து இதயம் செதுக்கிய சிற்பம்
விண் பார்த்து மனம் கேட்ட வரம்
மண் பார்த்த கண் கலங்க காதலோ பாடம்

காதலால் புண்பட்டுப் பண்பட்ட உள்ளம்
காதல் தெய்வீகம் என்று பண்பாடும்-வரமான
காதலால் பெருவாழ்வு வாழ்ந்தவரும் உண்டு
பிரிவால் கண்ணீர்க் கடலில் மூழ்கியவரும் உண்டு

**மனம் விரும்பியவள் நல்வாழ்வே**
**காதலுக்கு நான் செலுத்தும் மரியாதை**
**காதல் தத்துவமல்ல விவாதிக்க-அறிவு கடந்த**
**இதயத்தின் அன்பு மொழி, சரணாகதி,**

*I do my thing, and you do your thing*
*I am not in this world to live up to your expectations*
*And you are not in this world to live up to mine*
*You are you and I am I*
*And if by chance we find each other, it's beautiful,*
*If not,it can't be helped-*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-05-2023

# நீ இல்லாத உலகத்திலே





சுரிகுழலில் வண்ணப் பூச்சூடி-சுந்தரப் பிறை நுதலில்
பொட்டு வைத்து, செவ்வாயில் முத்துப் புன்னகை அணிந்த
வண்ண நிலா, சாயலில் தோகை, நடையில் அன்னம் என
மண் உலவும் மங்கையோ அழகு நிலா

மதி முகம், மையளாவிய விழி, நெய் தடவிய
பூங்குழல், மென் முலை, பவளச் செவ்வாய்,
புங்கய வண்ணம், கவிதை மொழியாகச் செல்வி
பூவும் விழியாக, புருவம் வில்லாக அழகி,

கண்டு மயங்க அழகின் ஓவியம், காதலாகிச் சுவைக்க
கன்னியோ காவியம், மும்மகளும் ஒன்றான பெண்மை
முத்தமிழின் இனிமை, சப்தஸ்வரங்களின் ஆலாபனை

இடை மின்னலோ?, நடை அன்னமோ?, பூ மேனி பொன்
வண்ணமோ? காண்போர் மனதைக் கொள்ளை கொள்ள
முல்லையும், மல்லிகையும் பூ மேனி மணம் சொல்ல, அணங்கிற்கு
கட்டியம் சொல்லும் அழகு, காதல் தேவதையாய் ஆரணங்கு

படித்துச் சுவைக்க பூவையோ காவியச்சுவை
பார்த்துச் சுவைக்க அழகோ ஓவியச்சுவை
இரசித்துச் சுவைக்க கன்னியோ முக்கனிச் சுவை
அறிவில் முத்தமிழ் வாழும் பாண்டியன் அவை-



வேலோ, கயலோ விழிகள் கண் வியக்க, இடை மின்னலோ,
நடை அன்னமோ, மனம் ரசிக்க, யாழோ, குழலோ மொழிகள்
செவி சுவைக்க,  வான் நிலவோ, தேன் மலரோ
காண்போர் மயங்க காமன் மலர்கணையாய் இவள்

நீயின்றி வாழ்வில்லை, நீயில்லா உலகோ
நிலவில்லாத வானம்-வாழ்ந்தால் உன்னோடு-
இல்லையேல் மரணம் என்னோடு, காதற் காமத்தால்
வெந்த காளையர் மனம் பாடும் கவிதை

காமன் கணை பட்டு, வேடன் வலை பட்ட
கலைமான்போல் மனம் தவிக்க- கண் வரைந்த ஓவியமோ,
நெஞ்செழுதும் காவியமோ, காதல் கவி பாடிக்களிக்க
அழகிலும், பேரழகாய் மதலேன் மரியாள்

செங்கனிவாயும், செவ்வாழைத் தொடைகளும், பூங்குழலும்,
முத்துப்பற்களும், மோகனச்சிரிப்பும் பேரழகைச் சொல்ல,
அள்ளிக்கொள், ஆசை தீர அணைத்துக் "கொல்", காதல்
கொள் எனச் சொல்லும் பேரழகு, காமன் கணையாய் வருத்தும்



மையிட்ட விழிகளில், மையலும், மலர்க்கணையும் நின்றாட,
தையலின் தேன்மொழியில் குயிலும், பைங்கிளியும் பண்பாட
காண்போர் உள்ளம் காமன் கணைபட்டுப் புண்ணாக, கனவும்,
நனவும் காமினி என்றாக, பரிசேயரையும் வாட்டிய காதற்சுரம்

அஞ்சுகமும் மொழி பயில இல்லத்தில் வாழும், கானக்குயிலும்
கீதம் பயில மாடத்தில் கூவும், கலாபமயிலும் நடனம் கற்க
முற்றத்தில் ஆடும், அணி நடை அன்னமும் மணி நடை பயில வீட்டை
நாடும், நிலவும், மலரும் அழகில் மயங்கித் தேய்ந்து வாடும்.

நீலநயனங்களோ நெஞ்சில் கோலமிட
கோலமயிலின் குறுநகையில் மனமோ தாளமிட
நனவிலும், கனவிலும் வருத்தும் காதல் தீ
காளையர் மனங்களில் காதல் வேள்வியின் ஆகுதி



மோட்சம் இன்பமோ? பொற்பின் மோகன பிம்பமோ?
காமவேதமோ? காதல் தீட்சையின் மந்திரமோ?
காதலின் அட்சய பாத்திரமோ?
கன்னியிவள் காதலிற்கு மூவுலகும் ஈடாகுமோ?

காமதேனுவும், கற்பகதருவும் கன்னியின் சுகம் தருமோ?
எண்ணித் துடிக்கும் இதயம்-ஏந்திழையாள் காதலுக்கு ஏங்கித் தவிக்க,
காளையர் மனமோ காதற் காமம் வருத்தும் துன்பக் கேணி
தேவதையோ வரமிருந்தும் கிட்டாத காதல் கனி

இடைதொட்டு நடையோடு பூங்குழல் சதிராட, மதி நுதலில்
பூத்த திலகம் பௌர்ணமி என்றே கூத்தாட, முத்துப்
புன்னகையும் திரண்ட இளமுலைகளும் பூத்த காமன் சோலை
காதல் வைபோகத்தின் வண்ண மலர் மாலை

மோட்ச இன்பம் இவள்தானோ? நெஞ்சை வாட்டும்
காதற் காமத்திற்கு தொட்டணைத்தாலே தீரும் சஞ்சீவினி
பாமினி, மதலேன் மரியாள்தானோ?

கானம் பாடும்போது குயிலின் கோலம், நடனம் ஆடிட
தோகையின் ஜாலம், காளையர் நெஞ்சிலே காதலின் கோலம்
கன்னியோ அழகின் அமுதகானம்

மோகமுள் தைத்து இதயம் நோக, காமன் கணைபட்டு
கல் மனமும் வேக, அலை கடல் துரும்பாய் வாடிய ஆண்கள்
காதற் காமத்தில் ஆகுதியான மோக மனங்கள்

கண் பட்டு, காமன் கணைபட்டு புண்பட்ட வேதியர்
கடைக்கண் பார்வைக்குத் தவமிருந்து ஏமாந்த காமுகர்
எட்டாக் கனியான கன்னிக்கு கண்ணி வைத்தார்-பரத்தை,
விபச்சாரி அபாண்டமாய் பழி சுமத்தி வஞ்சம் தீர்த்தார்





இறக்கையிழந்த வண்ணமயில் பறக்கத் துடிக்க
கானம் மறந்த புள்ளிக்குயில் கேவிக் களைக்க
வேடன் வலைபட்ட புள்ளிமான் அஞ்சி நடுங்க
சுந்தரியைச் சுற்றி வளைத்த ஓநாய்க் கூட்டம்

மையேந்தி ஆடிய பூவிழிகள் நீர் சிந்தி வாட
வளை ஏந்தி ஆடிய பூங்கரங்கள் சிறைப்பட்டு நோக
மலர் ஏந்தி ஆடிய சுரிகுழல் புழுதி பட்டு வருந்த-கார் கண்டு
ஆடிய தோகை-காலன் வரவு கண்டு முடமான பாவை

பூங்குழலோ கயவர் கரம்பற்றிக் குலைந்திருக்க, பூந்துகிலோ
கைபட்டு நொந்து கிழிந்திருக்க, பூவிழி வாட, தேன் மொழி குளற,
அச்சத்தில் நடுங்கிச் சோர்ந்த அழகு மயில்-உச்சத்தில்
அன்ன நடை பின்னிட மண்ணில் வீழ்ந்த பெண்ணோ ஓயில்



மலர்முகம் மண் பார்த்துச் சோர்ந்திருக்க-பூ மனதை
மரணபயம் சூழ்ந்திருக்க, காக்க, காக்க என்றே கடவுளைக்
கூவிய பைங்கிளி, சோகச் சிறையிருக்கும் சோகவனத்து
மைதிலி, துச்சாதனன் கைப்பற்றிய புதிய திரௌபதி

விம்மிடும் மார்பில் பெருமூச்சின் அவலம்
விழிநீர் மலர்களில் கங்கையின் ஈரம்
கலைந்த கலிங்கத்தில் பாஞ்சாலியின் துயரம்
இராகமாலிகையில் வஞ்சகரின் அபசுரம்

கரம் பற்றிக், குழல் பற்றிக், கலிங்கம் பற்றிக் மண்ணும், புழுதியும்
மலர்மேனியைப் பற்ற காமத்தீப் பற்றிய ஓநாய்க் கூட்டம், கன்னியை
தரதர என் இழுத்து வர, காலுடைந்த சின்னப் புள்ளிமான்
கதறியது, சிறகொடிந்த வண்ணப் புள் கேவியது

குபேரருக்கு மஞ்சம் விரித்த விலை மாது, குற்றம் சுமத்திக்
கூட்டம் சேர்த்தார் திருச்சட்டத்தை ஆயுதமாக்கி -திருமகளை
விலைமகள் என குற்றம் சொன்னார் வஞ்சகப் பரிசேயர்

ஒரு கல்லால் இரு மாங்காய்களை அடிக்க
ஒரு சதியால் இருவரையும் வீழ்த்த
அன்னை மகன் முன்-அணங்கை நிறுத்திய
அடங்காக் காமத்தால் துன்புற்ற அசடர்



நெஞ்சமோ வஞ்சிக்கு மஞ்சம் விரிக்க, கண்களோ கட்டழகை
மேய்ந்து காமப்பசி தீர்க்க, கரங்களோ பற்றிய மேனிச்சுகத்தில்
சுகம் காண, உத்தமராய் வேதமோதும் வெளிவேடக்காரர்
சத்திய சீலனிடம் குற்றம் காண -போலி வினயத்தோடு வினவினார்

கையும் மெய்யுமாய் விபச்சாரத்தில் பிடிபட்ட விலைமாது-
கல்லெறிந்து கொல்லுதல் திருச்சட்ட நீதி-போதகரே
உம் பதில் என்ன? நீரோ அன்பின் வழுவாத நியதி
திருச்சட்டத்தை அன்பால் புடமிடும் இரஸவாதி

அமலனைக் கண்ட விழிகள் ஆறாத் துயரில்
கண்ணீர் பொழிய, மொழி கேவ, அபயம் என்றே
நிமலன் பாதம் சரணடைந்த பேதை-நெஞ்சில்
கோடிச் சோக அம்புகள் தைக்க வாடிய கோதை

பார் பூத்த இறை வார்த்தை-இளங்கதிர்போல் ஒளிர, பார்த்த விழிகளில்
பரிவும், பாசமும் இழையோட கருணை பொழியும் எழில் முகம்
அபயமளித்து ஆறுதல் மொழிய, நீர் பூத்த விழிகள் மலர்ந்து சிரிக்க
நெஞ்சில், நிம்மதி நிலவிட, அமைதி கண்ட மங்கை




கார்குழல் தோளாட-கருவிழிகள் சுடர் வீச, வாழ்வுதரும்
வார்த்தை மௌன மொழி பேச, சாந்தமும், தாழ்ச்சியும் ஒன்றான
சாந்தரூபன், மண்ணமர்ந்த அழகு, மனதை மயக்க-வார்த்தை
மனுவுருவான கோலம் நங்கை கண்ட திருக்கோலம்

வாழ்வளிக்கும் வார்த்தையை, ஓங்கார நாதத்தை, ஆதியோடு ஆதியில்
ஒன்றான சச்சித்தானந்தத்தை பரிபூரணனை, அநாதரட்சகனை
சுத்த சைதன்யத்தை கண்டாள், எளிமையின் திரு, கருணையின்
வடிவாய் தரையில் அமர்ந்திருக்க நெஞ்சில் அமைதி கொண்டாள்

சத்தியமாய், சாந்தியாய், ஆனந்தமாய் அமர்ந்திருந்த அழகு
நெஞ்சுக்கு நிம்மதி தர, பார்க்கப் பார்க்கப் பரவசம் தரும் அழகை,
இளையவள் ஈரவிழிகளோடு வியந்து பார்த்தாள்

சுட்டும் சுடர் விழிகள் அருள் பொழிய, சுந்தரேசன் இருப்போ அபயம்
மொழிய, மண்ணமர்ந்த சௌந்தரராஜனின் திருக்கோலம்,
சுந்தரியும் அதிசயிக்க அடியார்க்கினியனோ, அடைக்கலநாதன்

“மேனி அழகைக்” கண்ட கயவர் “மெய்மையின்”
பேரழகைக் காண உள்ளத் தூய்மை இல்லாப் பாவம்,
குற்றம் காணும் இதயத்தில் இருளே எந்நாளும் வாழும் சாபம்

நொருங்கிய உள்ளம் உருகிக் கரைய-தேடிடும் தெய்வமும்,
தேவமகனும் இவர்தான் மனம் சொல்ல, உயிரும் மெய்யும்
ஒன்றாய் அக்களிக்க, அன்பர்கன்பனிடம்
அபயம் என்றியம்பி அமைதி கண்ட அபலை மனம்






வெற்று ஆடம்பரம் வீணே, விரயமே
அழகும் அழியும் என்பது நிஜமே-உண்மை சுட,
நெஞ்சைத் தொட அழுதாள் பேதை

மெய்யப்பன் காட்சி மனதிற்கு அமைதி தர
பொய்மையின் சூழ்ச்சி பொய்யாகும் மனம் சொல்ல
ஐயப்பன் கண்களும் பரிவோடு ஆறுதல் மொழிய
ஐயன் திருவடி அபயம் என்று சரணடைந்த பக்தை

பார்த்த விழிகள் பாவையின் பரிதாபத்தைப் புரிந்திட
நீர் பூத்துச் சிவந்த சேல்விழிகள் அபயம் என்றே கெஞ்சிட
வஞ்சம் பூத்த நெஞ்சங்களின் வெஞ்சினம் அறிந்தவர்
கல்மனங்களின் மனச்சாட்சி விழித்துப் பழிக்க
கயவர்தம் தீர்ப்பை மண்ணில் எழுதினார்



நல்லவராய் நயவஞ்சகர் ஆடும் நாடகம் நாறிட
காமுகர் மனம் மாறிக் காரிகையின் துயர் ஆறிட
கரம் பற்றிய கற்களும் நழுவிட-
“*உங்களில் குற்றமில்லாதவர் கல் எறியட்டும்*”

மனம் வெம்பிய கும்பலைப் பார்க வெறுப்புற்றவர்
குனிந்து மணலில் மீண்டும் எழுதினார்
குருட்டு நீதி பேசும் மானுடர் இறுதித் தீர்ப்பை

கல்லில் பொறித்த எழுத்தாய்-அன்புக் கட்டளைகள், காலமெல்லாம்
வாழ்வில் நிலைத்திருக்க, அன்பினால் இன்புற்று ஒரே குடும்பமாய்
வாழப் பணித்தவரைப் புறந்தள்ளி, காலவெள்ளத்தில் பலி,
சட்டம், சடங்காய் சீரழிந்த மதம், கள்வர் குகையான ஆலயம்

மண்ணால் ஆனவர் தீர்ப்பை மண்ணில் எழுதிட
மனச்சான்றும் விழித்தே மண்ணவரைப் பழித்திட
கல்லும் கனலாய் சுட்டுத் தகித்து கை நழுவிட
வெட்கி, விரைந்து மறைந்த விபச்சார குலச்சந்ததி

கொலைவெறி தணிந்து கூட்டம் மறைந்திட
கூற்றுவன் துரத்திய கோதை மனமும் ஆறிட
அச்சம் மறைந்திட, ஆனந்தி மனதிலே நிம்மதி




உந்தன் சந்நிதியில் நான் கண்டேன் நிம்மதி
இறைமகனே, நீயே நான் தேடும் பெருநிதி
காற்றாய் மாறிப் பூவாய் மலர்ந்த உள்ளம்
கன்னி நெஞ்சுக்குள் பூத்த ஹிந்தோளம்

*"அம்மா உன்மீது குற்றம் சுமத்தியவர்கள் எங்கே?*
*யாரும் உன்னைக் குற்றவாளி எனத் தீர்ப்பிடவில்லையா?*
இல்லை ஐயனே மொழிந்தவளுக்கு, நானும் தீர்ப்பிடேன்
அமைதியோடு செல்க, பரிவுடன் மொழிந்தவர் பாதம் தொழுத பூவை

பாவிக்கு வாழ்வு தந்தவர் பரமனோ?, தேவன் உண்டென்பதற்கு
திருமகனே சாட்சி, கூப்பிய கைகள் தொழுது பணிய
அஞ்சிய நெஞ்சில் அமைதி பூத்தாட, பாவம் பொறுத்து
வாழ்வளித்த தெய்வத்தை, தொழுதாள் கொழுநன் தொழாள்



தொழத்தக்க தூய்மையின் பேரழகை,
ஊர் போற்றும் பேரழகு கண்டு வியந்தது
வாழ்வு தந்த தெய்வத்தை, அழகும்
கண் கண்ட தெய்வமாய்ப் போற்றி மகிழ்ந்தது



அழியும் ஊனழகிற்காய் அலைபாயும் உலகு, அன்போ
அழியாப் பேரழகு , காக்கும் கருணையோ இறையழகு
உடைந்த உள்ளம் உணர்ந்து, உவகையோடு நன்றி சொல்லி
தேவப்பிரியனை பிரிய மனமின்றிப் பிரிந்தது

பொய் வாழ்வு வாழ்ந்தவள் மெய்வழி கண்ட பெருநாள்
மரண தண்டனைக் கைதி புதுவாழ்வு வாழ
மாகருணை உயிர்ப் பிச்சை ஈந்த திருநாள்

பரிதவித்து வந்தவளோ, பொய்யும் புரட்டும் புகையாய்
கலையக் கண்டாள், புடமிட்ட பசும் பொன்போல்
உள்ளம் ஒளிர, புண்ணியனே இனி உன் அடிமை நான்
என் வாழ்வும் வளமும் -உனக்கே காணிக்கை என்றாள்.

விழிகண்ட மன்னவனை -விலைமகள் எனப் பழி சுமந்த
பேதையைக் காத்த இரட்சகனை உயிரும் , மெய்யும்
வாழ்த்திப் போற்ற, எண்ணி களிக்க-இளையவள் நெஞ்சில்
இளமுல்லையாய் பூத்த முதற்காதல்

கார் கண்ட தோகையென மனம் ஆட, கண் பெற்ற
அந்தகன்போல் விழிகள் பூக்க, மழை கண்ட பயிர்போல்
மனம் செழிக்க-காதல் சிறகை காற்றினில் விரித்து-
வானவீதியில் பறந்த தோகை-கானக்குயிலான பாவை



எண்ணும்போதும், எழுதும் போதும், இதயம் துள்ளிக் குதிக்க,
நாணித் தவிக்க, மையிட்ட சேல்விழிகள் மயங்க, மனம்
ஒற்றைகுயிலாய் பண்ணிசைக்க, பசி மறந்து, பஞ்சணை துறந்து
கனவும் நினைவும் அவராகிக், காதலாகிக் கனிந்த கன்னி மனம்

அலைகடலாய் மனம் எழுந்து வீழ்ந்து தவிக்க-இதுவரை
அறியாத சுகமும், வெறுமையும் நெஞ்சைக் கவ்வ
மயங்கி நின்ற நங்கை, காதல் இதுதான் என்ற மங்கை

யாதுமாகி நின்றென்னைக் காத்தாய் , யாதுமானவனே,
என் மன்னவனே, இனி யாதும் நீயே எனக்கு, என்னுயிரும்
உடமையும் உனக்கே, மைவிழியும், பூ மனம் பூத்துக்குலுங்க
காதலாகிக் கரைந்து நின்றாள் பூங்கோதை

மன்னவனை எண்ணங்களால் கவிதையாக்கி வண்ணங்களால்
சித்திரமாக்கி-சித்திரப்பாவையும், காதல் சித்தப்பிரமையில்
வாடினாள் இதுதான் காதலா?, இதயத்தின் தேடலா?
உள்ளமுருகப் பாடினாள் பூங்கோதை



மெல்லிடை மெலியக் -கோவை இதழ் வெளிறக், குவளை விழிகள்
சிவக்க, மதி முகம் கறுக்க, தூக்கம் துறந்து வாடுகிறேன்,
உயிர் மெய் ஒன்றாய்ச் சோர, மூச்சும் பெருமூச்சாகிப் பூ இதயம்
கொதிக்க, பொன்மேனி வண்ணம் குன்றிடச் சோருகிறேன்

ஒரு தலைக் காதல் வருத்த, காமண் கணை பட்டு காதல் நோயுற்றேன்,
தேன்வண்டுக்காய் மதுமலரே ஏங்க, என் தேவனிடம் , அன்னமே
தூது செல்லாயோ? பூங்குயிலே கோமகனிடம் என் காதலைக்
கூவிச்சொல்லாயோ? மெய் மெலிந்து, உயிர் நலிந்து சோர்ந்த பூவை

மையல் கொண்ட தையலாள் மைவிழிகள் மனுமகனைக் காணாது
கண்ணீரில் கரைய, மதுமலர் கூந்தல் நெய்யிழந்து வாட-மலரின்றிச் சோர,
நெஞ்சும் நினைந்துருகிக் கரைய, கைவளையும், கால் கொலுசும்,
தளிர் நடையோடு காதலியாள் சோகம் சொல்லிப் புலம்பியதே

எண்ணி ஏங்கி அழுதவள்-பசியும்
மறந்தாள் பஞ்சணையும் துறந்தாள்-நெஞ்சில்
இறைநேசரைக் காதல் கொண்ட தோகை

கதிர் காணாக் கமலம்போல் மலர் முகம் வாட, இணையின்
இசைக்கோலம் கேளாமல், கோகிலத்தின் பூஞ்செவிகள் சோரக்
கார் காணாது கலாபமயிலும் ஏங்க, பாலும் கசந்து-மலர்ப்
பஞ்சணையும் நொந்திட, தேய்பிறையான பால் நிலவு

என் தலைவனோ எளிமையின் வடிவம்
எல்லோரும் நலம் வாழ நல்வழி காட்டும் நல்லாயன்
மழையும் , வெயிலும் வாட்ட-பசியும் குளிரும் தீய்க்க வாடும்
எளியோன், கூடும், வளையும், வீடுமில்லாத நாடோடிப் போதகன்




வண்ணமலர்கள்தான்-அந்தி வந்ததென்று வாடி உதிர
வாசமுல்லைதான் கொழுகொம்பின்றிப் புழுதியில் அலைய
என்னுள்ளத்தின் ஏக்கம்-இறைமகனே அறியாயோ? கண்ணீர்
துடைத்து காதல் பிணி போக்க கண்ணாளனே வாராயோ?

சின்னக் குயிலும் துணை தேடிக் கரைய, சந்திரனைக்
காணமால்  அல்லி மலர் வாட, என் வான்மதிக்கு
அமாவாசை என்று தேம்பிய மதுமதி

மாதவனைத் தேடி மனம் ஒற்றைகுயில்போல் கரைய, விழிப்பிலே
நினைவாகி, துயிலிலே கனவாகி என்னைத் துன்புறுத்தும்
காதல் தீ அணைக்க என்னை கட்டித் தழுவ வாராயோ?

கடித்துச் சுவைத்து இதழ் விடாய் தணிக்க, கிளர்ந்து
குமைந்து குதூகலித்து, உன்னைச் சேரத் துடிக்கும்
என் உயிர், அமைதிகொள்ள காதல் தருவாயோ ?
பாடி அழைத்து சூடத் துடித்த ஆண்டாள்



உன்னை எண்ணிப் பொன்னுடலும் வாட, உன்னுயிராய்
மாறி என்னுயிரும் தவிக்க, தனிமை என்னைத் தீய்க்க
உன்னைப் பிரிந்து தவிக்கும் இளமனசு

கயல் விழிகளுக்கு இனி மையில்லை, பூங்குழலிற்கு மலரில்லை,
வாச நெய்யில்லை, பூங்கரங்களுக்கு வளையில்லை-பூவைக்குப்
பட்டில்லை, பிறை நுதலிற்குப் பொட்டில்லை-பாதங்களில்
சிலம்பில்லை, பாவை உறங்கிடப் பஞ்சணையில்லை

அறுசுவை உணவிருந்தும்
அன்னம் துறந்து, அன்னம் மெலிந்தாள்
பதிவிரதையாய் நோன்பிருந்து
பத்தினியாய் காதல் தவமிருந்தாள் மாது

பொன்மேனி தழுவாமல் பூமேனி வாட, கொழு கொம்பின்றி காதற் புயலில்
பூங்கொடி வருந்த, முத்த விடாய் கொண்டு செவ்வாய் தகிக்க,
நெஞ்சம் கொதிக்க, மோகத்தீ எரிக்க, கட்டியணைத்து காதல் தீ
அணைப்பாயா?-முத்த மழையால் காதல் விடாய் தணிப்பாயா?



உன் அழகைக் காணமல், என் விழிகளும்-இமைக்கதவை
மூடாது, விழித்தே தவமிருக்கும், வாட்டும் காதற் காமம்-
கண்ணாளனே உன்னைக் காணாமல் குணமாகாது
கொதித்தே என்னை எரித்திருக்கும்

உன் இதழ் கொண்டு என் இளமேனி அளப்பாயா?
உன்னை நினைந்து மெலிந்த நூலிடையையும்
பொற்கரங்களால் தழுவி நலமளிப்பாயா?

காற்றையும். கடலையும் அடக்கி, சீடரைக் காத்த பெருமானே,
பூ நெஞ்சைப் புண்ணாக்கும் என் காதற் புயலைக்
கட்டி அணைப்பாயா? காதல் மொழிந்து அடக்குவாயா?

காமன் கணைபட்டு, பசலை நோயுற்று, விரகதாபத்தால்
உள்ளம் வாட, பூ மனதில் சோகப் புயல் வீச,
சேல் விழிகளிலோ கண்ணீர் வெள்ளமிட, மனதிற்கும்,
உடலிற்கும் மருந்து இன்றி மயங்கி நின்றாள் மாது

நோயுற்ற மாது -உன் ஆடைத்தொங்கலைத் தொட்டுக்
குணமானாள், பசலை நோயுற்று விரகதாபத்தால் வாடும்
மனதும்-உன்னைத் தொட்டணைத்தாலே குணமாகும்

வசைகேட்டு வாடிய சிந்தையும்
செவிகளும் குளிர-வாசத்தைலத்தால்-
கருங்குழலை அபிஷேகித்தேன்

புழுதியால் வாடிய உன் பொற்பாதங்களை, கண்ணீரால் நீராட்டி,
முத்தமழையால் பாத பூஜை செய்து, நறுமண தைலத்தால்
காப்பு வைத்து, கார் குழலால் துடைத்து, காதலால் உன்னைச்
சேவித்தே, என்னைக் காணிக்கையாக்கி நின்னடி சரணம் என்றேன்

கண்ணீரால் என் காதலுக்கு அங்குரார்ப்பணம், பாத பூஜையால்
என்னையே உனக்குச் சமர்ப்பணம், காதல் மொட்டவிழ-தேன் சிட்டாய்
என்னைப் பருகி- என் விடாய் தணிப்பாயா? சருகான மலர் மீண்டும் மலர
காதல் மழையால், ஆயிழையாளுக்கு புத்துயிர் அளிப்பாயா ?
கண்ணாளனே!. பாவி என் காதலுக்கு தடை சொல்வாயா?

பரம்பொருளே, இறை மகனே-உன்னைக் கண்டு மலர்ந்த
என் இதயமும் காதலாகித் தவிக்க, வானமுதே உன்னை
உண்டு தவிக்க, என் சித்தம் நினைப்பு செய்கை எல்லாம் உனதே
அடிமையை ஆட்கொண்டு, எனையாள்வாய் என் பெருமானே.



உன் பொற்பாதம் பூஜித்து என் உள்ளமும் உன் வசமானது.
உன்னைத் தொட்டதனால் உள்ளம் குணமானது
விழிநீர் சிந்தி பொற்பாதம் கழுவியதால் புனிதவதியானேன்
உன்னைத் தொழும் பாக்கியவதியானேன்.

நினைப்பதற்கு உனையன்றி நினைவில்லை, உண்மையாய்
என்னை நேசிப்பதற்கு, உன்னைத் தவிர எனக்கோ யாருமில்லை
என் உடல், பொருள், ஆவியும், உடைந்த  காதல் இதயமும்
பெருமானே உனக்கே அர்ப்பணம்

நதியாய் ஓடி கடலே உன்னோடு என் காதல் சங்கமம்
மழையாய் வீழ்ந்து –செம்புலப் பெயல் நீர்போல்
மண்ணே, உன்னோடு என் ஐக்கியம்

பூவாய் மலர்கின்றேன்-சூடிக்கொள்ளாயோ?
அமுதாய் இனிக்கின்றேன்-என் காதலே
அருந்தி என்னை ஆட்கொள்ளாயோ?



என் மலரளந்த கார்கூந்தலில் -மாமலராய்
உன்னைச் சூடக் கண்டேன்-மாசறு
உன் திருமேனியில் வாசச் சந்தனமாய் எனைப் பூசி
நான் மணந்தேன், உள்ளம் குளிர்ந்தேன்

கொஞ்சிப் பருகும் காதல் மதுவாய் உன்னை நெஞ்சில்
ஊற்றிக்கொண்டேன், மையணிந்த என் சேல்விழிகள்
மெய் காண காதலாகிப்- பேதை
உன்னை மெய்காட்சியாய் கொண்டேன்-

நேசரின் அணைப்பின்றி பஞ்சணையும் பாலையாய் கொதிக்க
இனியவர் இதழமுதம் பருகாமல் செவ்விதழ்களும் காய்ந்து கறுக்க
பொன்மேனி தழுவாமல் நூலிடையும் நொந்து மெலிய
திருவடிவம் காணாமல் சேல்விழிகளும் மங்க வாடினாள் பூவை

அன்பரின் அணைப்பின்றி கிளர்ந்து குமைந்து பொங்கிய
செங்கலசக் கொங்கைகளும் சோர, கூப்பிய மலர்கரங்களும்
கொழுநன் தாள் தொழத்தவிக்க, பாலும், மலைத்தேனும்
பாகாய் கசக்க, உயிர் வாடி, உடல் மெலிந்த திருப்பாவை

பூ உள்ளமும் வாடுதடி உயிர்த்தோழி, பூ மஞ்சமும் காயுதடி
-நீயேனும் என் காதலுக்கு தூது செல்லாயோ?
சொல்லி மாய்ந்தாள்-விரகதாபத்தால் வாடி
பசலை நோயுற்று வருந்திய காதலி

செவ்வாய்ச் சுவை தெள்ளமுதோ? மலைத்தேனோ? பொன்மேனி
வாசம் அகிலோ? சந்தனமோ? இவர் அணைப்பின்றி அணையுமோ
என்னைத் தீய்க்கும் ஆனந்த உணர்வு? எண்ணும்போதே என்
சுவாசத்தில் பூவாசம், என்னுள் காதல் பூம்புனல் பாயும் பரவசம்



அங்கமெல்லாம் பூத்துக்குலுங்கும் அழகை
அர்ச்சனை மலராய்த் திருவடி கொட்டத் தவிக்கின்றேன்
சூடிக்கொடுத்த மலர்மாலை-நீ சூடாமல் வாடிக்கிடக்க
பூங்கோதை மனமும் காதற் காமத்தில் வேகிக்கருகுதே

பொன்மேனி தழுவாமல்-பூவை என் கொடியுடல் வாட
உன் பூ முத்தம் சுவைக்காமல் காதல் தேனீ நான் வருந்த
என் இதயக்கோயிலும்-தெய்வமே நீ இன்றிப் பாழ்பட,
ஒற்றை குயில்போல் கரைந்து- உனைத் தேடி காற்றினிலே வரும்
என்தன் காதல் கீதம் கேளாயோ? மனம் இரங்காயோ?

என் இதயப் பூவனமும்-கதிரே உன் உதயமின்றிக்
கறுத்திட, வாட்டும் காதலால்-கண்ணாளனே
வாடும் மலரானேன், காயும் நதியானேன்.
கருணை காட்டு என் காதலனே, கண்ணாளனே



என் காதல் நிலவே, நீயில்லா என் மனவானில்
அழகில்லை, எந்நாளும் அமாவாசை இரவே
உன்னை காணாத கண்களில் ஒளியில்லை
அந்தகனின் அழியாப் பேரிருளே-

உன் மொழி கோளாத செவிகளில் யாழும், குழலும் பாகாய் கசக்க
உன்னோடு காதல் மொழி பேசாமல்-என் கனி மொழியும்
கவித்துவம் இழக்க, கானம் மறைந்து ஊமைக் குயிலான பாவை
அன்ன நடையும் முடமாக நடைப் பிணமான வண்ணத் தோகை

எரியும் என் இதயமோ தீபாஞ்சலி, காதல் இசை பாடும்
மனமோ கீதாஞ்சலி, கொதிக்கும் என் சுவாசமோ தூபாஞ்சலி
மங்கை நானோ உனக்கு மலரஞ்சலி

என் இதயத்துடிப்பும் என்னவனே கேட்கவில்லையா?
என் இதய கீதமும் மன்னவனே உன்னைச் சேரவில்லையா?

ஒரு தலைக் காதலால் வாடும் என் நெஞ்சில், கசை வதைத்து,
வசை சிதைக்க, கழுமரம் சுமக்கும் துயர் என்றுதான் மாறுமோ?
காதலும் எனக்கு சிலுவைதானா? கல்வாரிப் பாதைதானா?

பேதை நெஞ்சமும் உன்னைச் சேரவே தவிக்கும்
சின்ன இதயமும் உன் பெயர் சொல்லியே துடிக்கும்
என் சித்தம், நினைப்பு செய்கை எல்லாம்
உன் அன்பிற்காய் எந்நாளும் தவமிருக்கும்.



நீரைத் திராட்சை மதுவாக்கி மணவீட்டின் மங்களம் காத்தாய்
நிலை குலைந்த காற்றையும், கடலையும் சீராக்கி-அன்புச்
சீடரை மீட்டாய்- தீய ஆவிகளைத் துரத்தி பேரானந்தம் ஈந்தாய்
காதலாகிப் பொங்கித் தவிக்கும் பேதை மனம் அடங்கிட
அணைப்பாயா? ஆனிப்பொன்மேனி அமைதிகாண
காதல் வரம் அருள்வாயா? கண்ணாளனே

பால்போல் பொங்கிப் பௌர்ணமி நிலவுபோல் பூரிக்கும்
என் காதல் மனம் பாராயோ? உன்னை எண்ணிட
பொன்மேனி எங்கும் நாணம் போடும்-காதலின்
வண்ணக்கோலங்களை நீ காணாயோ?

அர்ச்சனை மலராய் உன்னைச் சேர ஆசிக்கின்றேன்
அணைத்து என்னையும் அர்ச்சனையாய் ஏற்பாய்
காதல் வேள்வியில் ஆகுதியாய் எந்தன் சமர்பணம்
ஆட்கொண்டு காப்பாய் அன்பனே! எனையாளும் ஆண்டவனே

தொழுநோயாளியை, பரிவோடு தொட்டுக் குணமளித்தாய்,
காதல் காமத்தால் நலியும் என் கட்டுடலை
கட்டியணைத்து காதல் சுகம் தருவாயா?



உன் கனிரச முத்தங்களால், வற்றி தீர்ந்த காதல்
மதுவையும், என் இதழ்களில் வற்றாமல் காப்பாயா?
உன் காதல் இன்றி எரிநரகில் வேகுகின்றேன்
காதலா, காதலாகி என்னை மீட்பாயா?

நல்ல கள்வனுக்கு ஈந்த பரகதியை நாதனே உன்னை
எண்ணி ஏங்கும் அபலைக்கு , உன்னோடு எந்நாளும்
வாழ அருள்வாயா? உன் இதயத்தில் இடம் தருவாயா?

இறந்து அடங்கிட்ட இலாசரும் எழுந்து வாழ
வரமளித்தாய், இழிந்த வாழ்வில் நிலை குலைந்த
அபலைக்கும் புனர் வாழ்வு அளிப்பாயா?

என் உள்ளம் காதல் கொள்ள-ஆணாய், உனையன்றி
எவருமில்லை, என் ஆனிப்பொன்மேனியும், ஆவியும்
ஈசனே, உனக்கே என் தன் காதல் காணிக்கை
ஏற்று என்னை மீட்டருள்வாய் என் பெருமானே



சுந்தரனோ?, இளஞ்சூரியனோ? என் இதயத்தை வாட்டும்
காதல் மந்திரம் இவர் பெயர்தானோ?-என் இந்திரியங்களும்,
இதயமும் இவர் பெயர் கேட்டு மயங்க, மழை கண்ட பயிராய்
அபலை மனமும் துளிர்க்க, கண்ணாளனே வருவாயா?

இவரின்றி என் உயிர் மெய்யும் இயந்திரம்போல் இயங்க
அல்லி என்னை அந்தியில் தழுவி மகிழும் சந்திரனாய் வருவாரோ?
தாந்திரிகத்தால் நாமும் ஒன்றாகி சுத்த சைதன்யம் ஆகிட
என் காதலுக்கும் உயிர் தருவாரா?

உன் காதலின்றி என் பூமேனியும் வாட, என் இதயமும்
உன் அணைப்பின்றி, மதுரசம் தீர்ந்த மணவீடாய்க் காய
உயிர் கொடு-உன் இதழ் அமுதத்தால்,
என் காதலுக்கு வாழ்வு கொடு

மணவீட்டின் புது திராட்சை மதுவாய், உன்னைப் பருகிடக்
காதல் கொடு, காலமெல்லாம் நம் காதல் வாழ
வாசமலராய் என்னை சூடு, கண்ணீரால் பாத பூஜை செய்து
காதலைச் சொன்னேன், இன்னும் ஏனிந்த மௌனம்?

சிலுவையடியில் கதறியழுதே-அன்னை மரியோடு
அபலை நானும் நின்றேன்
ஒரு மொழியேனும் எனக்கும் சொல்லு

உன்னை காணாது என் விழிகளும் காய, ஆயனில்லா ஆடுகள்போல்
என் நினைவும், பல திக்கும் பாய்ந்தோட-விரகதாபமோ
ஓநாய்போல் துன்புறுத்த வாடுகின்றேன், அன்பே என் நல்லாயனே
என்னைக் காக்க வருவாயா? காதல் பசும் புல்வெளியில் மேய
காதல் பசியாற அருள் புரிவாயா? வரம் தருவாயாய?

பெண்ணோ பேரின்பப் புதையலோ-இவள்
பிறவிப்பயன் போக்கும் ஆனந்தப் படையலோ இவள்
கண்டவர் மயங்கும் பேரழகு மங்கை
காதலால் ஆட்கொள்ளத் திருமகனை அழைத்தாள்

காதலாகிக் கனிந்த கனி, பணிந்தே இறைமகன் காலடியில்
ஒற்றை குயிலாய் உருகிக் கரைந்த கன்னி
பௌர்ணமி நிலவாய் பூரித்த பெண்மை-காதலால்
உருகிக் கரைந்திட தேய்பிறையின் தன்மை





உன்னோடு வாழவே என் உயிர் துடிக்கின்றது
உன்னாலே என் பெண்மையும்
என்னுள் உயிர்த்தது- துளிர்த்தது

போகியாய் வாழ்ந்த பேரழகிக்கு–பாவிக்கு
புத்துயிர் அளித்த இறைமகனே-என்னுயிரே
உன்னோடு வாழவே என் இதயம் தவமிருக்கின்றது

நீயின்றி என் மெய்யிலும் உயிரில்லை, இதயத்திலும்
துடிப்பில்லை-சுவாசத்திலும் மூச்சில்லை-
என் வாழ்விற்கும், என் வசந்தமே பொருள் இல்லை

உம்மைச் சிலுவையில் சிதைத்தபோது, காதல் சிலுவையில்
நானும் சிதைந்தேன், கல்லறையும் கொள்ளாத
உன் திருவுடலை-பத்திரமாய் நெஞ்சுக்குள் பூட்டி
பொக்கிஷமாய் காத்தேன்



பரிவோடு கல்லறைத் தோப்பில் உன் காட்சி
பரந்தாமனாய் உன் மாட்சி
கண்டு கட்டிக் கொண்டேன்-காதலாகிக் கனிந்தே
உன்னை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்தேன்

இழிந்தவள் எனக்கும் உன் உள்ளத்தில் உயரிடம் தந்தாய்-
உயிர்த்து முதலில் , எனக்கே காட்சி தந்து-
சீடரில் ஒருத்தியாய் என்னையும் ஏற்று வாழ்வளித்தாய்

கசைகள் உழுத உன் பொன்னுடலை,
கட்டியணைத்து ஆறுதல் சொல்லத் துடிக்கின்றேன
ஆணிகள் துளைத்த உன் மேனியை
முத்தங்களால் ஆற்றிடத் தவிக்கின்றேன்

கழுவிக் களித்த உன் பொற்பாதங்களை, காயத்தால் புண்பட்ட
திருவடிகளை கண்ணீரால் கழுவி, கார் குழலால் துடைத்து
தைலத்தால் மெழுகி- முத்தத்தால் மருந்திட்டு-என்
இதயதெய்வமே பாத பூஜை செய்திட ஆசிக்கின்றேன்

ஈட்டி துளைத்த இதயத்தை- காதல் இதயத்தால்
ஆற்றிடத் துடிக்கின்றேன் முள்முடி தரித்து நொந்த
பொன்முகத்தை மார்போடணைக்கத் துடிக்கின்றேன
என் காதலே!, என் காதலை நீ அறியாமல்,
யார் அறிவார், எண்ணியே மனம் குளிர்கின்றேன்.

அண்ணகர் வாழும் உலகில், ஆணாய் கண்டதும்
உன்னைத்தான், கன்னி மனம் தேனாய் இனிக்க
காதல் கொண்டதும தேவனே, அழகன் உன்னைத்தான்

பூவாய் தன்னை சூடிக்கொடுத்த பூங்கோதை
காதல் பிச்சைக்காய் உன்னைக் கெஞ்சும் பாவை
ஆட்கொள்வாய் அருளாளனே என் பெருமானே



என் நெஞ்சுக்குள் நீயிருக்க- கல்லறையில்
உன்னைத் தேடிய காரிகையோ பேதை, என் கண்களுக்குள்
நீயிருக்க கனவில் தேடிய பூவையோ அபலை

நீயே என் வாழ்வு, உன் உள்ளமே என் காதல் உலகு
காதல் பாவமல்ல-காமமும் பாவமல்ல
காமம் கடந்தால் கடவுளே, காதல், காதல் காதல்,
காதல் போயின் சாதல், சாதல்

வானவன் வார்த்தையோ -நிலை வாழ்வு தரும் வானமுதோ
பாலையின் குரல் மொழிந்த தேவ நீதியோ
பாவிகளுக்கு நண்பனான அமைதியின் தெய்வமோ?
முள்முடி சூடி-மூன்றாணிகளால் கழுமரத்தில் தொங்கியது



காதல் நெஞ்சைத் துளைத்த ஈட்டி-
கன்னித் தாயவள் நெஞ்சிலே சோகத்தின் ஆட்சி
**கன்னி நெஞ்சிலோ அழியாக் காதலின் மாட்சி**

**காதல் பாவமல்ல-காதலிக்காதவர் யாருமிலர்**
**காதலே முதல் வேதம்-மனிதம் நிலைக்க**
**இறை தந்த ஆசிர்வாதம்**



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-19-10-2023

# பாஞ்சாலியின் காதல்

துள்ளும் கலைமான்களும், துடி நடை போடும் பேடுகளும்
துணை கண்டு தோகை விரித்தாடும் மயில்களும்
இணை கண்டு பாடும் புள்ளிக்குயில்களும்
காதல் கதைபேசும் கிளிகளும் வாழும் கானகம்
நல்வரவு கூறி பாஞ்சாலியை வரவேற்ற நேரம்





பூமழை பொழிந்து நல்வரவை பூ மரங்கள் சொல்ல
பார்த்து இரசித்து பரவசமாகிப் பாஞ்சாலியும்
பூவும், புல்லும் நோகாது அன்ன நடை நடந்து வர
அணங்கிற்கு துணையாய் பீமனும் அருகில் வர
கானகமே-வானகமான வண்ணத் திருவிழா அன்று

மைவிழிகள் கண்டு மான்விழிகளும் மையல் கொள்ள-
வாரி முடிக்காத கார் கூந்தலில் வாழ்வோம் என்றே
வண்ணப் பூக்களும் ஆசை கொள்ளப்-பூ முகம்
காணப் பொய்கையில் பூத்த குமுதங்கள் தவித்தன

வண்ணமகள் சின்ன இடை கண்டு வாசப்பூங்கொடிகள் வியக்க
கொவ்வைச் செவ்வாய் கண்டு கோவையும், கிளிகளும் ஒன்றாய் மயங்க
குறுநகையில் ஒளிர்ந்த முத்துப்பற்களால்-மல்லிகையும்,
முல்லையும் மகிழ்ந்து விரிந்து நறுமணம் தூவின



பூவை வாசம் பூ வாசமே என மலர்களும் மணக்க
வரமாய் அக்கினியில் பூத்த "***அக்கினி மலர்***"
கானகத்தில் களி நடை புரிய -பிரம்மன்
நூற்ற நூதனப் பேரழகாய்ப் பாஞ்சாலி

கைவீசி, கதைபேசி, கண்பாாத்து இரசிக்க நடந்தவளைக்
கைகெட்டும் தூரத்தே கனிந்து தொங்கும் நெல்லிக்கனி
கவாந்திடக் கை நீட்டிப் பறித்துக்கொள்-என்னை
கடித்துச் சுவைத்துக்கொள் என அழைத்தது

பறிக்க முயன்ற கனியோ பாவைக்கு
எட்டாத உயரத்தில் நிலைக்க-கை நீட்டித்
துள்ளிப் பாயந்தவள் துடியிடை நலிய, பாதங்கள் சிவக்க
பங்கய முகத்தில் முத்தாய் வியர்வை துளிர்க்க
பழுத்த நெல்லிக்கனியை பாவை சுவைக்க-மகிழ்ந்தே
பலவான் பீமன் பறித்துக் கொடுத்தான்

மகிழ்ந்தவளும் மனம் விரும்பிய கனியைச் சுவைக்கத் துணிய
மாமுனியின் சீடனோ மாதைத் தடுத்தே கனியின் கதை சொன்னார்
பல்லாண்டுக்கொருமுறை காய்க்கும் அபூர்வ நெல்லிக்கனியிது
பல்லாண்டு உண்ணாமல் தவமிருந்த தவ சிரேஷ்டர்-
உண்ணும் ஒரே உணவிது, முனியோ நீராடச் சென்றுள்ளார்
முனி உண்ணும் கனியை பறித்தது தவறு அம்மணி





முனி சிரேஷ்டரின் சினமோ கொடிது
முனி வரமுன் கனியைத் -தாயே
மரத்தில் ஒட்டவைப்பதே சாலச்சிறந்தது
முயன்றாள் பலனுண்டு
இல்லையேல் சாபமே வரமாயுண்டு

பறித்த கனியை ஒட்ட வைக்க யாரால் முடியும்-
பல காலம் தவம் புரிந்த முனிவரேயன்றி
யார் செய்வார் அரிய இச்செயலை
தன் செயலுக்காய் வருந்தியவள்-காப்பாய் என்றே
கண்ணனைத் துணைக்கழைத்தாள்

கண்ணனும் தோன்றிடப் பாண்டவரும் ஒன்று கூடிடப்
உள்ளத்து இரகசியத்தை உள்ளவாறு இயம்பிட கனியும்
மரம் சேரும் முனியின் மனம் குளிரும்
முயலுங்கள் பாண்டவரே என்றான் கண்ணன்

பாண்டவரும் தம் உள்ளத்து இரகசியங்களை
முகவுரையாய் உள்ளவாறு ஒவ்வொருவராய் உதிர்க்க
உயர்ந்த கனி ஒட்டாமல் நிற்க-நெஞ்சின் இரகசியம் உரைக்க
பாஞ்சாலியின் முறையும் வந்தது முடிவுரையாய்



என் உள்ளத்து இரகசியத்தை உள்ளவாறு எப்படி உரைப்பேன்
உண்மையை உரைப்பின் உறவுகள் என்னைப் பழிக்குமே,
வருந்தியவள் பூ நெஞ்சத்துள் பூட்டிக் காத்த இரகசியத்தை
பாண்டவரும் அறிய உரைத்தாள்

கண்டதுவும் இதயம் கமலமாய் விரிந்ததுவும்
கயல் விழிகளால் அழகனை உண்டதுவும்
ஒரு கணம் காதலாகித் தவித்திட நெஞ்சம்
கவர்ந்த கள்வனாய்க் சூரிய புத்திரன் கர்ணனே.

அந்தனனைக் கொண்டதுவும் பின் ஐவரை மணந்ததுவம்
விதியாக, விம்மிய நெஞ்சத்துள் விரும்பிவன்-ஒளிந்த கதை
சொல்ல ஒரு நேரம் வந்ததென்று விம்மினாள் பேதை.

அன்னை மொழியாள் ஐவரை மணந்த தேவி
இதயத்தில் அழகனாம் கர்ணனை வரித்ததை
எவரும் அறியா வண்ணம் ஆழ்கடல் முத்தாய்-நெஞ்சில்
ஒளித்த கதை சொல்லிட வந்த நேரம் அது






கன்னி மனம் கர்ணனன் மேல் கொண்ட
முதற் காதலைச் சொல்லிட- கனியும்
இருந்த இடம் சேர்ந்திடக் கலக்கமும் மறைந்தது
பாண்டவருக்கு மயக்கமும் பிறந்தது.

ஏழ்கடலினும் ஆழம் எழில் நங்கையர் உள்ளம்-
ஆணுள்ளம் அறிந்திட ஆறறிவு போதாது
அணங்கின் ஆழ்கடல் நெஞ்சுக்குள் கிடக்கும்
அபூர்வ முத்துக்களை அறிந்திட ஏழாம் அறிவும் போதாது
எப்பெருமான் அருளும் போதுமோ?

கனியால் வந்த வினையும் நீங்க கன்னி மனத்திலோ
கர்ணனை கண்ட முதல் நாள் ஞாபகம் புது மலராய்ப் பூக்க
பாஞ்சாலம் மணக்கோலம் பூண்ட நன்நாள்
பாஞ்சாலியின் சுயம்வரத் திருநாள்.

பாராளும் மன்னரெல்லாம்-மணமாலை சூட
படை, குடை, பரி, கரியொடு பாஞ்சாலம் வந்துசேர
பார்த்தவிடமெல்லாம் வண்ண அலங்காரம்
பாஞ்சாலி மணமகளாய் மாறிடும் சுபநேரம்



அன்ன நடையோடு அழகாடக், கார்மேகப் பூங்குழலாட,
கொடியிடை ஆடக், கண்ட கோமகன் நெஞ்சங்கள்
காதலால் வாடக், கோமகளோ கொய்யாத கனி,
காதல் கிளி கொத்தாத தேன் மாங்கனி



ஆனிப்பொன்னில்-பிரம்மன் அழகெல்லாம்
ஒன்று கூட்டி வடித்த உயிர்ச்சிற்பமாய் இவள்
வண்ணமெல்லாம் வடிவாய் கலந்து
காமன் தீட்டிய பேரழகின் ஓவியமாய் அவள்

காளையர் நெஞ்சைக் காதற் சுரம் வாட்ட-வண்ணமலரெல்லாம்
பூவையிவள் மெய்சேர்ந்து பூம்பொழில் காட்ட-
முகமோ தாமரை, முறுவலோ முல்லை, விழிகளே குவளை
அமுது சுரக்கும் குமுத வாய், காந்தளோ கரம், செண்பக மூக்கு,
ஐம்பூ விளையும் அமிர்த நிலம்-பார்க மயக்கும் பசுந்தேறல்
முற்றும் துறந்த முனிவனும் கண்டிடத் தீய்க்கும் கவறல்



பூங்குழலில் வண்ணத் தேன்மலர்கள் பூவனம் கூற
தித்திக்கும் இதழ் சுவையில் மலைத்தேனும் நாண
தளிர் கரங்களில் பூக்களும், பொன்
முத்து, வைர வளையல்களும் குலுங்கிடப் பூவை

முத்துப்பற்களும், மோகனச் சிரிப்பும்
சிற்றிடை தொட்டு விரிந்த செவ்வாழைத் தொடைகளும்
பங்கய்ப் பாதங்களும்- பொற்குட மார்பும்
நங்கையை ஒரு முறை பார்த்தாலே
மீண்டும் பார்கத் தூண்டும் பேரழகு மங்கை
காமனையும் வதைத்திடும் அழகின் கங்கை

நூலிடையில் ஆடி மேகலையும் பாட, பொன்னணியும்,
பூ அணியும், பெண் அணியாய் நாணமும் அழகைக் கூட்ட,
ஐம்புலன்களும் ஆறாம் அறிவும் வான் மங்கையோ
காதலின் தேன் கங்கையே-இவள் என கண்டவர்
நெஞ்சு துடித்திட கன்னியோ அழகிலும் பேரழகு

கண்டதும் இதயம் தழுவிடத் துடிக்கும் அழகு, கவிபாடக்
கவிகளும் மொழியின்றித் தவித்திடும் காவியப்பேரழகு,
மன்னவன் யார் சூட வரம் பெற்றான் திருமகளை என
மன்னரும் மயங்கிட மாசற்ற பேரழகி கன்னி பாஞ்சாலி



அவைக்கு வந்த இளவல்களை அமைச்சர் அறிமுகம் செய்திட
நெஞ்சை தொடாத இளவல்களால் மனம் சோர்ந்திட
ஆரவாரமாய் வந்த அரவக் கொடியோன் பின்னே
பிரியாத உறவாய், அழகிய நட்பாய் வந்த கர்ணணன்

தோற்றமோ க்ஷத்திரியனல்ல-தேவபுருஷன் இவன் எனக் கூற
தேஜஸோ சூரியனை சொல்ல நடையிலே அரியும்-
குறு நகையிலே பரிவும் பொங்க-இரப்போர்க்கு
இல்லையென வழங்கிச் சிவந்த கரங்களும்
உற்ற நண்பனக்காய் உயிர் கொடுக்கவும் துணிந்தவன்
எனச் சொல்லும் மிடுக்கும் இவன் சொந்தம் எனச் சொல்ல
மையெழுதிய விழிகளும் மயங்கிடக் கண்டாள்

கன்னியர் கண்களும் காதல் கொள்ளும் திருமகன்
கர்ணனைக் கன்னி திரௌபதி கண்டாள்
எதையும் தருவான் கர்ணன், இரந்தால்
இன்னுயிரும் தருவான் கர்ணன்
என்றே வள்ளலாய் வாழ்பவன் வந்திடக் கண்டாள் -
கண்டதும் மனதில் காதல் கொண்டாள் வனிதை

சுருண்ட விரிகுழல் தோள்சாய, சுந்தரக் குண்டலங்கள் செவியாட
செம்மார்பன் கவசமோ பொன்னொளி வீச
வாரி வழங்கிடும் கரங்களோ வள்ளாண்மை சொல்லிட
சிரித்த முகத்தோடும், சிவந்த இதழ்களோடும்-பணிந்து
பரந்தாமனை வணங்கிடும் பார்த்தீபனைக் கண்டாள்
பங்கய முகமும் கதிரவனை கண்டு மலர
மனமும் காதலாகிப் பூத்த பொழுதது.




அள்ள அள்ளக் குறையாத வள்ளல் அவன் தன்மை,
மெல்ல நடந்து வருகையிலும் வேழமாய்க் கம்பீர நடை-சூரிய
புத்திரனின் சுந்தரமோ சுந்தரி மனதைக் கொள்ளை கொள்ள
உள்ளங் கவர் கள்வனைக் கண்டாள்
கடைக்கண் நோக்கிக் காதல் கொண்டாள் கன்னி

வான் தரும் கொடையோ சில மாதம்,
பசு தரும் பாலோ சில காலம்
கனி தரும் மரங்களுக்கும் சில மாதம்
கர்ணன் வள்ளாண்மைக்கு காலம் ஏது நேரம் ஏது?

கண்களில் கயல் எழுதி, திங்களால் முகம் எழுதி
கார்கூந்தலில் மலர் எழுதி, கன்னிமகள் நெஞ்சிலே
காமன் எழுதிய முதற் காதல்-உள்ளம் கொள்ளை கொண்ட
காதல் கள்வனாய் வள்ளல் கர்ணன்.

கயல்களும் கண்டதும் முதலில் சுந்தரன் கர்ணனையே
மாலை சூட மனம் தவித்ததுவும் வள்ளலையே
உள்ளம் புது மலராய்ப் பூத்ததுவும் உத்தமனுக்கே

கண்டதும் கமல விழிகளும் கணப்பொழுது மயங்க
கர்ணனோ மன்னவன் துரியோதனனுக்காய் வந்த சேதி -நூலிடைாள்
காதில் இடியாய் ஒலிக்க கலங்கியே கண்ணனை நோக்கிய கன்னி



முறுவலோடு விழிகளால் ஆறுதல் மொழிந்தவன்
தேரோட்டும் சைகையை கைகைளால் காட்டிட
உள்ளம் தெளிந்தாள், உள்ளம் நொருங்கிட-உருகும்
உணர்வையும் தன்நெஞ்சில் கண்டாள் திரௌபதி

இயந்திர மகரத்தை விழுத்திட இயலாமல் தோற்ற மன்னவர்
இருக்கைக்குத் திரும்பிட, தன் முறை வரக். கர்ணனும் வந்தான்
அரிமா நடை கண்டு அஞ்சண விழிகள் ஆசை கொள்ளப்
ஆரும் தழுவாத பொன் மார்பனை-பூவை
விழிகளும் பூ மாலையிட்டுத் தழுவிட ஏங்கியதே

பூவிழிகள் தழுவி ஏக்கம் தீர்க்க
பாவையர் முகம் நோக்காப் பார்த்தீபன்
தரை பார்த்து முகமன் உரைத்தே
தனுசைக் கையில் அநாயாசமாய்த் தூக்கினான்



பூவை பாஞ்சாலியை-பூமாலையாய்
நண்பன் பெருந்தோள் சேர்த்திட -குறுநகையோடு
நாணையும் வில்லில் பூட்டினான்

மன்னவன் திருவழகை மகளும் கண்களால் உண்டு களிக்க
கன்னி நெஞ்சோ கவிதை எழுதிக் களிக்க-ஏந்திய வில்லோ
ஏந்திழையாள் இளநெஞ்சை நொறுக்கி கழுத்தை இறுக்க
துரியோதனனுக்காய் தூக்கிய வில்லும் தளர-அனலான மொழியை
அணங்கின் செவ்வாய் உதிர்க்க அதிர்ந்து நின்றான் அங்கத மன்னன்

வாரி வழங்கிச் சிவந்த கரங்கள் வலிய வில்லுக்கு
நாணேற்றிக் களிக்க, பூரித்த புயங்கள் புகழ் சூடத் தவிக்க
நட்பிற்காய் உயிரையும் ஈயும் உத்தமன் உள்ளம் புண்பட
உத்தமியும் சொல்லால் சுட்டாள் மன்னன் பூ மனதை



தூக்க முடியாமல் வெட்கிய வேந்தர் வியக்க
தூசென வில்லை-ஒரு கரத்தால் தூக்கி
கணை பூட்டி நின்ற கண்கவர் கள்ளன் வென்றாள்
துஷ்டன் துரியோதனுக்கு தாரம் நான்
துணிந்தவள் எழுந்தே துணிவோடு உரைத்தாள்



நாடாளும் மன்னராயினும்-நீர் தேரோட்டி மகனன்றோ?
பாஞ்சாலன் மகள்-தேரோட்டிக்கு ஒரு போதும் மாலையிடாள்
பாராளும் வேந்தனும் சாதியில் தேரோட்டியானாள்
குலதர்மம் நிலைக்காது, க்ஷத்திரிய குலம் தழைக்காது

திறமையைப் புறம் தள்ளி, சாதியம் கூறி நிந்திக்கும்
மன்னன் மகளால் நல்மனம் தளர்ந்தே நலிவுற
வில்லையும், நாணையும் கீழே வைத்தே வருந்தியவள்ளல்.
தேரோட்டி மகன் சொற்கேட்டு, மன்னவர் நகைத்திட
வெந்தீயில் விழுந்த புழுப்போல் வாடிய கர்ணன்

“என் தாயே ஏன் என்னைக் கங்கையில் விட்டாய்
கழுத்தை நெரித்து கொன்று இருக்கலாம்
இழி சொல் கேட்டு அணுவணுவாய் இறப்பதை விட
அன்று இறந்திருந்தால் எத்துணை நன்று-நாளும் எரிக்கும்
சாதியத்தீயோ எரி நரகிலும் கொடிது”



கண்ணீர் துளிர்க்க, மனம் கசந்து நொந்தவன்
குனிந்த முகத்தோடு இருக்கைக்கு திரும்பிட
கொதித்த துரியோதனன் கூம்பிய மலராய்
வாடிய நண்பனை தழுவித் தேற்றினான்

தோற்ற மன்னருக்கெல்லாம் மாவீரன் கர்ணனுக்கு
நேர்ந்த அவமானம் ஆனந்தமளித்திட
குன்றா வீரம் படைத்தவனும் தலை குனிய,
தலை நிமிர்ந்து தரணி ஆண்ட சாதியம் குலதர்மம்?



வார்த்தை சுட்டதை வனிதையும் அறிந்தே வருந்தினாள்-
நெஞ்சில் பூத்த சோகத்தை நிமிர்ந்த முகத்தோடு, மறைத்தே
நாடகமாய் ஆனந்த நகைப்பை சிந்தினாள்

அந்தணக் கோலத்தில் அருச்சுனன் வென்றதுவும்
ஐவருக்கு மனைவியானதுவும் தொடர் கதையாக
கர்ணன்மேல் கொண்ட முதற் காதலோ கன்னி மனதில்
கனியாமல் போனாலும்-அழியாத நினைவானது
கலையாத வண்ணக் கோலாமானது

அன்றொரு நாள் கண்ணனும், கர்ணன் புகழ்பாட
வள்ளலாய் வாரி வழங்கிட இவ்வுலகில் இவனுக்கு ஏது நிகர்
வார்த்தைகளால் புகழ்ந்திட வனிதையும் மகிழ்ந்தாள்
துரியோதனன் நண்பன் என்றே தூயவள் மனம் நொந்தாள்





அவையிலே மானபங்கம் நேரிட்டபோது-ஐவரும்
வாய் பொத்திக் கைகட்டி நின்றிட
தருமமே தாரத்தை சூதாடித் தோற்ற நிலை
பூ நெஞ்சை ஈட்டியாய் ஊடுருவிய அவல நிலை

மானம் காத்திட மங்கை மன்னன் திருதராட்டினனிடம்
நீதி கேட்டுப் புலம்பிட, வாளாவிருந்த பெரியோர்அவையில்
கர்ணனும் ஐவருக்கு மனைவி எனத் தன்னை இகழ்ந்தது
மனதை அனலாய்த் தீய்த்திட நீள் விழிகளில்
நீர் எழுதி நியாயம் கேட்ட மங்கை

நீர் பூத்த விழிகளோடு கர்ணண் நிலம் பார்த்து தன் நிலைக்காய்
வருந்தக் கண்டு மாதும் வாடினாள்-செஞ்சோற்றுக் கடனுக்காய்
நஞ்சுண்ணவும் தயங்காதவன் நஞ்சான மொழி செப்பியது
நண்பனை திருப்த்திப் படுத்தவேயன்றி தன்னை புண்படுத்த அல்ல
செல்லும் பாதை அறமல்ல என அறிந்தும் கொடியவன் அல்லேன்
எனச் சொல்லும் செவ்விழிகளால் சற்றே ஆறுதல் அடைந்தாள்

ஞானி விதுரனும், கண்ணனும் போற்றிய மாவீரன்
காக்கும் கவச குண்டலங்களைக்-தானமாய்க்
கேட்பவன் இந்திரன் என அறிந்தும் மகிழ்ந்து
இரப்போருக்கு இல்லையென்று சொல்லாத வள்ளல்
வரமாய் அரிந்தே அளித்தே சாவை வரவேற்ற தீரன்





ஒரு தடவைக்கு மேல் நாகாஸ்திரத்தை-தம்பி
அருச்சுனன் மேல் தொடுக்க மாட்டேன்-ஐவரில்
அருச்சுனன் தவிர எவரையும் கொல்ல மாட்டேன்
அரியனை கிடைத்தாலும் ஆருயிர் நண்பன்
துரியோதனை பிரியேன், நட்பிற்கு களங்கம் செய்யேன்
மாதா குந்திக்கும்-மகனாய் வரம் கொடுத்த வள்ளல்

கர்மவீரனாய் பேராடிய தீரன் புதையுண்ட தேர்ச் சில்லை தூக்கிட-
வஞ்சனையால் வதைபட்டான், அருச்சுனன் கணை பட்டு வீழ்ந்தும்
உயிர் பிரியாத வேளையிலும், உயிர் காக்கும் தர்மத்தை எல்லாம்
உருமாறி அந்தணனாய் வந்த கண்ணனுக்கு உவந்தளித்த மகிழ்ந்தான்



கண்ணனும் தன் மெய்யுருவைக் கர்ணனுக்கு காட்டி மகிழ்விக்க
மகிழ்ந்து உயிர் நீத்த கர்மவீரன்

மடிமீது மகனைத் தாங்கி மாதா குந்தி மார்பறைந்து அழ
மன்னவன் இவனோ எனக் கண்டவர் வியப்புற-
பாண்டவரும் மாண்டவர் சகோதரன் என வாடிச் சோர்வுற
சேதி கேட்டு பதறி வந்த துரியோதனன்



"நண்பா என் ஆருயிர் நண்பா என்றே புலம்பி-
கண்ணில் நீர் வடியக், கனிந்த நட்பு உதிர்ந்திட
நட்பிற்கு இலக்கணம் வகுத்த வள்ளலே
யார் இனி என் நண்பன் என்றே நண்பனைக்
கட்டியணைத்துக் கதறி அழுதான் துரியோதனன்



என் மனதில் ஏனிந்தச் சோகம்,
இன்று யார் வீழ்ந்தார் வெஞ்சமரில்
சேதி கேட்டு வந்த பாஞ்சாலியும்
மங்காத சோதியோடு மாண்டு கிடந்த
சூரியபுத்திரனைக் கண்டாள்.-மனதில்
தீராத சோகம் கொண்டாள்

சோகம் நெஞ்சைக் கொல்ல, சூடிய விழி நீர் மெல்லச் சிந்த
அணங்கும் நெஞ்சுக்குள் அழுதாள்-ஏனோ? உன் வாழ்வில் என்போல்
இத்தனை சோகம் என் கர்ணா? என்றே

பாண்டவர் ஐவரை மணந்தும்
பாஞ்சாலியின் முதற்காதல் அழியவில்லை





தாயால் கைவிடப்பட்டு, சாதியத்தால் காயப்பட்டும்
சந்தணமாய் தேய்ந்து, கற்பூரமாய் எரிந்து
கர்மவீரனாய் வாழ்ந்த வள்ளல் கர்ணன் புகழ்
என்றும் மங்கவில்லை-கற்பாய் அவன் நட்பு
களங்கமல்லாத உயர் நட்பாய்
மன்னன் துரியோதனன் உறவு

மெய் தொடாமல் உயிரில் பூத்த உண்மைக் காதல்-
ஒரு கணம் மலர்ந்து மறுகணம் மறைந்தாலும்-
மங்கை மனதில் நிலைத்த ஒரு தலைக்காதல்-கர்ணன்



மன்மத அம்பைத் தடுத்து நிறுத்த தனுர்வேதத்தில்
அஸ்திரங்களில்லை-காமபாணத்தை வெல்ல
சிவதனுசாலும் முடியவில்லை



காதலைத் தடுத்து இதயத்தை காக்க
கவசங்களும், வியூகங்களும் இல்லை
படை கொண்டு போராட-காதல் போராட்டமல்ல
காதல் இதயத்தின் துடிப்பு, உணர்வின் விழிப்பு

வில்லும் வேலும் வீழ்த்தாதவரை
வேல்விழிகள் வீழ்த்தும்,
வாளும், அம்பும் சாய்க்காதவரை
காமபாணம் சாய்க்கும்



காதல் புனிதமானது, காதலும் வேதமே
மானிடம் வாழ தேவன் அருளிய மாசற்ற கொடை-காதலே

யார் கொன்றார்?, கொல்ல இயலாக் கொடை வள்ளலை-மாவீரனை
அருச்சுனன் கொன்றானா வேடிக்கை- அருச்சுனன் கர்வம் கலைய
கண்ணன் உரைத்தான் உண்மையை

அந்தணன் இட்ட சாபத்தால் தேர்க்கால் புதைய
குரு பரசுராமன் இட்ட சாபத்தால்
அரிய அஸ்திர வித்தை நினைவினின்று மறைய
அமரதேவன் இந்திரன் வஞ்சகமாய்
கவசகுண்டலங்களைத் தானமாய்க் கேட்க
அறிந்தும் கொடை வள்ளலோ மேனி சிவக்க
அரிந்து கொடுத்து மகிழ்ந்தான்

அன்னைக்கு வழங்கிய வரத்தால்
நாகாஸ்திரத்தை ஒரு முறைக்கு மேல்
மறுமுறை தொடுக்க மறுத்தான்-





சல்லியனும் கோபமுற்று தேரோட்ட மறுத்துக்
களம் நின்று விலக, ஏற்கனவே
இத்தனை பேர் குற்றுயிராக்கிய மாவீரனைக்
இறுதியில் சாய்த்தவன் அருச்சனா நீ?

புதைந்த சக்கரத்தை தூக்கிய நிராயுதபாணியின்
நெஞ்சைத் துளைத்த உன் கணைகள்,
ஏவியவன் நான், எய்தவன் நீ
இதில் பெருமைபட என்ன இருக்குது?

வீழ்ந்த மாவீரனை காலனும் நெருங்க மறுக்க
செய்த தானதர்மத்தை எல்லாம் வஞ்சகமாய் நான்
அந்தணண் வேடந்தாக்கி இரக்க- அறிந்த வள்ளல்
தன் தர்மத்தை எல்லாம் உவந்தே ஈந்து
தன்னுயிர் நீத்தான், இதுதான் உண்மை





இறந்தும் இறவாப் பெருமை
கர்ணனுக்கேயன்றி வேறு எவருக்கு?
மடியும் வேளையிலும் செய்தத தர்மத்தை எல்லாம்
மதாவனுக்கு ஈந்த வள்ளல்போல் யாருமுண்டோ?

கங்கையின் ஒரு கரையில் மைந்தனை
அநாதையாய் கைவிட்டவளோ க்ஷத்திரிய நங்கை
அநாதையை மறு கரையில் தன் மகனாய் ஏற்று
அகமகிழ்ந்தவளோ சூத்திர மங்கை

உயர்குடி தூற்றக், கோலும், படையும், குடையும்,
முடியும் கொடுத்து நாடாளும் மன்னனாகி மகிழ்ந்த நண்பனோ
சாதியம் கடந்த மனித நேயன் துரியோதனன்-காதலாகிக்
கணப்பொழுது கனிந்தவளோ அக்கினில் பூத்த அழகிய மங்கை

மடிந்து செஞ்சோற்றுக் கடன் தீர்த்த கர்ணன்
நட்பை உயிரிலும் மேலாய் மதித்த மாவீரன்
வாழிய, வாழியவே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-20-05-2023*

# இராவணண் காதல்

---

ஜனகன் மகளே, கானகத்துக் கலாபமயிலே,
என் காதல் வனமோகினியே, மொழி கடந்த பேரழகே
உன்னைக் கண்டபின் -புரிந்துகொண்டேன்
அழகைக் காணச் சூர்ப்பநகைக்கு விழியில்லை,
உன்னை வர்ணிக்க அவள் நெஞ்சில் கவிதையில்லை





பெண்ணின் அழகு ஆணிற்கே தெரியுமடி
விழி பார்த்த பேரழகை வர்ணிக்க
காதல் நெஞ்சும், கவிஞன் மனமும் தேவையடி

என் நெஞ்சிலே-உன்னைக் கண்டபின்
காதல் ஊற்றுக்கள் கண் திறக்க-மைதிலியே
முதன் முறையாய்க் காதல் பூப்பூக்க-பூவே
உன்னைச் சூடிக்கொள்ளக் காதல் திருடனானேன்

கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் காரிகையே
என்னையும் ஒரு மலராய்ச் சூடிக்கொள்ளாயோ?.
என் காதல் மனம் தவமாய்த் தவமிருக்க-வைதேகி
மனமிரங்கிக் காதல் வரம் தருவாயா?

கயலும் வேலும் விழிகள் சொல்ல,
கார்மேகம் கூந்தல் சொல்ல,
கடைந்தெடுத்த சந்தனத் திருமேனி
திருமகள் அழகைச் சொல்லியதே



திங்களோ, செங்கமலமோ திருமுகம் சொல்ல
பார்க்க மயங்கும் பசுந்தேறலோ
பாவையிவள் திருமகளின் அருள்நிதியோ-என்
திடந்தோள்களும் நடுங்கிடத் காமன் திருப்படையோ
அழகாய் நின்று ஆரணங்காய்த் தோன்றி
என் நெஞ்சை வருத்துவது.

பொன்னோ, மணியோ, நித்திலமோ?
என் வீணையில் பிறவாத தேன் இசையோ
பாற்கடல் மோகினியோ? பருவம் எல்லாம்
பூத்துக் குலுங்கும் காதல் தேன்மலரோ
காமன் கணையாய் என் மனதை வாட்டுவது.
மாமன்னன் என் மனதை வீழ்த்தியது

தவத்தால் உன்னை அடையமுடியுமென்றால்
சிரமரிந்து சீதையே உன் மனம் மாறத் தவம் புரிவேன்
இசையால் உன்னை ஈர்க்க முடியுமென்றால்
ஏழ் ஏழ் ஜென்மத்திற்கும் உனக்காய்த்-தேவி
என் வீணையை மீட்டிடுவேன்



உன்னை அடையக் காலடியில் தவமிருந்தேன்
காதலே!, சாபம்தான் வரமானதடி
என் வீணையிலும் சோகம்தான் சுரமானதடி

உன்னைக் காணும் போது விழிகளிலே விரகதாபம்,
எண்ணும்போது என் நரம்புகளில் எரிக்கும் காதற் காமம்
கெஞ்சியும், மிரட்டியும் பணியாத உன் காதல் நெஞ்சு
என்னைப் பாழாய்ப் படுத்த விம்மும் என் வீரம்

மூவுலகும் வென்றவனுக்கு, மைதிலி பூ இதயத்தை
வெல்லத் தெரியவில்லை-உன் காதல் இதயத்தை வெல்ல
காதல் கவிதை சொல்லத் தெரியவில்லை-நீயே என்
தேன் நிலவு, நிலவில்லாத வானம் நீயில்லாத என்தன் உலகு

மறக்க முடியாத உயிர், உன்னைப் பிரிந்து வாழாது,
வெறுக்கத் தெரியாத மனம் உன் காதலின்றிச் செழிக்காது,
மறக்கத் துடித்தும் நினைவிலே நீ
நினைத்து அழும் உன் நெஞ்சிலோ-ஸ்ரீராமனடி,
என் உயிர் பிரிந்தாலும் என் காதல் மறையாது
உனைப் பிரிந்தும் என் காதல் வாழாது





சிந்தையைக் கொள்ளை கொண்ட பேரழகே
நிந்தைகள் வந்தாலும் என் நேசம் மாறாது
கந்தை உடுத்திப் பிச்சை ஏற்றாலும்-மைதிலி
உன் மேல் கொண்ட காதல் மறையாது

என் நெஞ்சை இராமபாணம் துளைக்கும்போது
ஸ்ரீராமனும் அறிவான் என் காதலை,
இராமனோடு வாழும் போது-சீதா
நீயும் அறிவாய் என் காதலை.

தீக் குளிக்கும்போது என் கற்பை உலகறியும்
அயோத்தி மகாராணியே, கர்ப்பிணியாய்க் கானகத்தே
நீ கலங்கும்போது நீயும் நினைப்பாய்
என்னே இராவணன் காதல் என்று

என் உயிர் குடிக்கும் இராமபாணத்திற்கு-
என் உணர்வோடும், உயிரோடும் கலந்த எனனுயிர்க்
காதல் தெரியாது-அஸ்திரம் வெறும் ஆயுதமடி
காதல், வேதத்திலும் மேலானதடி

என் உடல் துளைத்த இராமபாணமும்-தேடிக்
களைத்துப்போகும் எங்கே இவன் காதல் என்று
துடிக்கும் என் இதயத்திலும், தவிக்கும் என் சுவாசத்திலும்
ஓடும் குருதியிலும் ஒவ்வோர் அனுவிலும்
கலந்தே இருக்குதடி என் காதல்-மடியும் போதும்
மறைந்தே உனக்காய்த் துடிக்குமடி



ஒரு தலைக் காதல் பாவமா?
காதலும் ஒரு முறை அதிலும் முதல் முறை
உன்னை கண்டதினால் வந்தது சாபமா?

காதலுக்காய் என் சாவும் ஈசன் தந்த கொடையடி
காதலுக்காய் வீழ்தலும் ஆண்மையடி
உன் மீது நான் கொண்ட காதலும்
என் பாவங்களுக்குப் பரிகாரமடி

பொன்மானைக் கண்டு பேதை நீ மயங்கிடப்,-பொன்மானே,
உன்னைக் கண்டு காதல் போதையில் நான் கலங்கிடக்
உன் பேரழகில் என் அஸ்திரங்களும் புஸ்வானமாய்ப்போனதடி
உன் தேன்மொழியிலும் என் வீணாகானமும் தோற்றதடி

அஞ்சன விழிகள் கண்டு என் நெஞ்சம் தத்தளிக்க,
அழகு மலர்கூந்தலோ ஆடி என்னை அலைக்களிக்க,
சின்ன இடையோ என்னைச் சிறையெடு எனப்பணிக்க,
பூ விழிகளோ என் நெஞ்சை கொத்திக்கிழிக்க
துடித்துப்போனேன், காமக் கணைபட்டுத் தவித்துப்போனேன்



செவ்விதழ்களோ பருகிப்பார் என அழைக்க,
செம்மாங்கனிக் கன்னங்களோ கடித்துச் சுவை எனச் சிரிக்க
காமன் கணைபட்டு நொந்த நெஞ்சு , காதல் வசப்பட்டு
வலை வீழ்ந்த கலைமானாய்த் துடிக்குதடி

வாசமுல்லையே நீ படர உன் கொளுகொம்பு
நானடி வனமோகினியே நீ வாழ
இராவணண் இதயம்தான் உன் கோயிலடி.
மாசறு முத்தே, வலம்புரிச் சங்கே
என் நேசம்தான் நான் மீட்டும் வீணையடி

கார்முகில் மறைத்த பௌர்ணமியா?
வானகத்து தேவதையா கானகத்தில் உலாவுவது?
நெஞ்சு வியக்க கிளி கொத்தாத மாங்கனியாய்
வண்டு அமராத புதுமலராய் நீயடி
கொத்தத் தவிக்கும் காதல் கிளியாய் நானடி



காதல் அஞ்சுகமே கடைக்கண் பாரடி-பிரம்மன்
எழுதிய ஓவியமாய் , கலைவாணி பாடிய காவியமாய் நீ
இமைக்க மறந்து என் விழிகள் தவிக்க-துடிக்க
மறந்து இதயம் களைக்க-என் காதல் நோயும் நீயடி
காதல் நோய்க்கு மருந்தும் நீயடி

வனமோகினி உன்னைக் கண்டு வண்ணமலரெல்லாம்
வியக்க, வான் மலர்களும் வெட்கி வெளுக்க
கானப்புள்ளினங்களும் இசைக்க, என்னே அழகு நீயடி
என் நெஞ்சின் காதல் உலகு நீயடி

செவ்வாழைக்கால்களும், சிறுத்த கொடியிடையும்
செக்கச்சிவந்த சந்தன மேனியும்
செவ்விளநீர் மார்பும், வார்குன்றா முலைகளும்
கார்மேக வார்குழலும், செவ்விதழும்
செம்மாங்கனி கன்னங்களும் அள்ளிக்கொள்
ஆயிரம் தடவை அணைத்துக் "கொல்" எனச் சொல்ல
என்னைக் கொல்லும்  காதல் மோகினி நீயடி.
கணைபட்டும் புண்படாத என் நெஞ்சு
உன் பூவிழிகள் பட்டுப் புண்ணானதடி.



கொடியிடை தழுவ மெய்யும் தவமிருக்க
கொவ்வை செவ்விதழ் பருக நெஞ்சம் விடாய்த்திருக்க
அள்ளியணைக்க வழியின்றி ஆவி துடித்திருக்க
ஆண்டிபோல் நின்ற மூவுலகாளும் இராவணேஸ்வரன்

கற்பகதருவும், குபேரநிதி இருந்தும்-
உன் காதலின்றி, ஏழையானேன்
மூவுலகிருந்தும் -உன் இதயத்தில் இடமின்றி
காதல் உலகில் பரதேசியானேன்

பொன்மானைக் கண்டு மகிழும் பெண்மானைக் கண்டு,
கலைமானாய் காதல் கொண்டு என் இதயம் மயங்க,
கள்ளிருக்கும் மலர்க்கூந்தலின் வண்ணமலர்கள்
ஆயிரம் கதைபேசி என் நெஞ்சை அலைக்களிக்குதடி
உன் அணைப்பின்றி என் ஆவி துடிக்குதடி

கன்னக்கதுப்பினில் கன்றி நின்ற செம்மையும்
கயல்விழி வண்ணமும் நெஞ்சை நெருப்பாய் எரிக்க,
வைதேகி உனைக் கண்டு காதல் நோயுற்றேன்
காமன் கணைபட்டு மயங்கி வீழ்ந்திட்டேன்
குமுத வாயால் அமுது கொடு ஜானகி-என்
காதல் மயக்கம் தீரட்டும்

நோயும், கணையும் வீழ்த்திடாத இராவணண்.
காதல் நெருப்பும் யாக குண்டமாய் எரிய
காதல் கொள்-இல்லையேல் சாதல் கொள் என
இதயம் இடித்துரைக்க-சாமவேத வித்தகனும்
காதல் வேதம் கண்டு கலங்கினேன்

சந்திரஹாசம் தாங்கியவனும்
காமன் கணைகளால் புண்பட்டேன்
பிராணனும் வாடிடப் பிராட்டியே சீதா
காதல் பித்தனாய்த் துன்புற்றேன்.

காமன் தந்த காதல் நோயிது சீதா, உன் காதல் இன்றி ஆறாது
மயன் மடந்தை மண்டோதரியாலும் போகாது
அரம்பபையரும் அழகு மங்கையரும் அணைத்தாலும் தீராது-
கலங்கியவன், காலன் வழி போகின்றேன் சாதலே மருந்தென்று.

களம் பல கண்டும் கலங்காத நெஞ்சம்
கரிகள் பல குத்தியும் காயமடையாத தோள்கள்
காமன் பூங்கணை தாக்கியபோது புண்பட்டுக் காயமானதே
காதல் நோயுற்றுக் கவலைக்கிடமானதே

கள்ளும் தீர்க்காது, கனிரசமதுவும் போக்காத நோயிது.
கன்னியர் உறவும், அரம்பையர் சுகமும்
காமம் தணிக்கலாம், காதல் நோய் தணிக்குமோ?
காதலக்கு காதலே மருந்து -இல்லையேல் சாதலே பெருவிருந்து

உள்ளமும் துள்ளிக் காதல் சொல்ல-ஊனும் உயிரும்
உருகி ஏங்கித் தவிக்க, மைதிலி விழிகண்டு
மன்னன் மயங்கிச் சோர உயிரும் மெய்யும் இவள்
செவ்விதழ் அமுதிற்காய் வாடித்தவித்ததே

செவியும் செந்தேன் மொழி கேட்கத் தவமிருக்க
சுந்தரியின் பேரழகில் சுவாசமும் அடங்கிட
ஐம்புலனுமொடுங்கி, ஆறாம் அறிவும் மயங்கி
என் ஆன்மாவும் காதல் என்றதே

ஆய கலைகள் அனைத்தும் கற்றறிருந்தும்
அறிவு போதவில்லை ஜானகி நெஞ்சை வெல்ல
காதல் கலை புதிரானது-மங்கை
ஶ்ரீராமன் மேல் கொண்ட காதல் புனிதமானது-
கற்போ காக்கும் கவசமானது



நீயில்லா என் வாழ்வோ நெய்யில்லாத் தீபமானது
நெஞ்சோ, காதல் தேனின்றி வாடும் தேன் தும்பியானது
இதுவரை அறியாத இன்பச் சோகம் இதயத்தைக் கொல்ல
காதல் ஏழையாய் வருந்தி நின்றேன் இலங்கேஸ்வரன்

பூவில்லா வனமானதடி என்தன் நெஞ்சம்
தீ எரியும் நரகானதடி என்தன் மலர் மஞ்சம்
வான் மழை காணப் பயிராய் வாடுதடி
இராவணன் காதல் நெஞ்சம்

அஞ்சுகத்தின் மொழியே செவிக்கின்பம்
அஞ்சாத நெஞ்சத்து ஆடவன் என் உயிரோ
உன் பொன்னடிகளில் தஞ்சம்-தேவி
உன் பூமடிதான் என் மலர் மஞ்சம்

வந்தனை செய்தும் மயங்காத சீதையால்
சிந்தையில் தீராத சோகம் மாறாத காதல் மயக்கம்,
வணங்கா முடியோ-முடியிழந்த மன்னாய் வாட
முகாரி இசைக்கும் நெஞ்சம்-அன்பே உன்னிடம் தஞ்சம்



களங்கள் பல கண்டும் கலங்காத நெஞ்சம்
கலங்கியதே மாறாத வைதேகி மனம் கண்டு
கணைபட்டும் கலங்காத நெஞ்சம்-காமன்
கணைபட்டு வாடியதே வருந்தியதே

பிரம்மாஸ்திரம் துளைக்காத என் நெஞ்சை-ஜானகியின்
“மோகனாஸ்திரம்” வீழ்த்தியதே-கவலை மேகம்
சூளாத என் மனவானில் நாளும் சோக மழை
-காதல் மழைக்காய்த் தவமிருக்கும் மனதில்
யாரும் காணாத கண்ணீர் மழை-

முனிகளும் மயங்கும் பேரழகே, முத்தமிழின் இன்சுவையே,
முக்கனிச்சாறே, கானகத்தே உன் பொற்பாதங்கள் நடைபயில
கட்டாந்தரையில் உன் பூவுடல் துயில் கொள்ள
பூமகளே பொற்கொடியே! என் நெஞ்சம் புண்ணாணதடி

வீணைக் கொடியோன் மாடமாளிகையும்
பூ மஞ்சமும் நீயின்றி வெறிச்சோடிப்போனதடி
உன் தேன்மொழி கேளாமல்-மீட்ட மறந்த
என் வீணையும் தூசி படர்ந்து ஊமையாய்ப் போனதடி
என் இதயமும் இவளைச் சேரும்-இவளிற்காய்
என் உயிரும் போகும் என்றதடி



தேவரும் அமரரும் திருப்பணி செய்ய-மூவுலகாளும்
மன்னவன் எனக்கு அரசும், ஆட்சியும் சலித்ததடி
சாமவேதம் புளித்ததடி -உன்னைத்தேடி
என் வீணையின் விளரியும் விம்முதடி



பெண்மையம் அழகும் பிறழா மனத்திண்மையும்
வண்மையும், சொல் வன்மையும் கொண்ட தேவி
காதல் வரம் தருவாள் எனக் காத்திருந்தேன்-ஈகையாய்
ஏனும் காதலை இரப்பாள் என ஏங்கி நின்றேன்

காலன் என் கோட்டைக் கதவுகளைத் தட்டிட
ஸ்ரீராமன் போர் முரசு கொட்டிட
காதல் காதல் காதல்-காதல் இல்லையேல்
சாதல் சாதல் சாதல் நன்றென்றே களம் புகுந்தேன்

அரம்பையர் சேவிக்க, அமரரும் தேவரும் தொழுது பணிய
மாமன்னாய் வாழ்ந்த வாழ்வும் ஒரு தலைக் காதலால் வீழ்ந்தது
உயிர், மெய்யை ஊடுருவித் தேடிய இராமபாணமும்
உயிர் கலந்த காதல் கண்டு ஊமையாய்ப் போனது



மன்மதன் கணைபட்டு புண்பட்ட மகேஸ்வரனும்
மன்மதனை எரித்துத் தம்மைக் காத்தார்
ஈசனை நாளும் தொழுத சிவபக்தனோ -காமனை
வெல்ல வழியன்றிக், ஸ்ரீராமன் கணைபட்டு வீழ்ந்தான்

நரக வேதனையிலும் கொடிது-நங்கை மேல் கொண்ட
ஒரு தலைக் காதல் என்றே கலங்கி நின்றான்
ஸ்ரீராமன் கணைபட்டு வீழ்ந்தபோதும்-மன்னன்
காதல் என்றே மயங்கி நின்றான்

கைலையை அசைத்த என்னால்-ஜானகியின்
காதல் மனதைக் கடுகளவும் அசைக்க முடியவில்லை
ஆயிரம் கரிகளோடு பேராடி வென்ற மனம்-சிற்றிடை
அழகியிடம் சிக்கிச், சொக்கித் தோற்றுப் போனது.

வைதேகியின் ஆழ்ந்த காதலைப் புரியாது
ஒரு தலைக் காதலில் விழுந்த என் மனமோ
அலைகடல் துரும்பான அவல நிலை



இளமையும் வெறும் கனவே,-மதுவும்,
அழகு மங்கையர் மேனிச் சுகமும் கானல் நீரே,
அரம்பையர் சுகத்திலும் காதல் இல்லை,
கணிகையர் காமத்திலும் காதல் இல்லை

காதலாகி கனிந்த உறவு பெரு வரமே-காமம்
கடந்து மெய் ஞானியாய் வாழ்தல் பெருஞ்சுகமே.
மரணத்திலும், உண்மைக் காதல் சுகம் ஒன்றே மெய்யே.
காதலுக்காய் மடிந்த இராவணனன் கதை
உலகு அறியாத ஒன்றே

சீதைமேல் காதல்கொண்டு சீரழிந்தேன்
அசுர நீதியைக் கைக்கொண்டு, பிறன்மனை நோக்காப்
பேராண்ரமையில் வழுவிநின்றேன
சீதையின் பெருமையறியாது சிறுமையுற்றே
செருக்கழிந்து, செந்நீர் வடிய, புண்பட்டு, மணிமுடி சரிய
மாமன்னன் இராவணண் மண்ணில் கிடக்கின்றேன்





மைதிலியே, என் மனங்கவர் மாதரசியே
கானகத்துப் பூங்குயிலே-என் பூவனத்து தோகை மயிலே
மண்ணில் வீழ்ந்தாலும் என் காதல் மறையாது
தீயில் எரித்தாலும் என் காதல் தீயாது

இராம பாணமா என் காதலைக் கொன்றது
பதிவிரதை சீதை மேல் உற்ற மோகமோ-மூவுலகாளும்
என் பெருமானை வீழ்த்தியது-நீயின்றி வாழ்வேது
கண்ணாளா, உன்னோடுதான் என் வாழ்வு
உன்னோடுதான் என் சாவு-மடிந்த **மண்டோதரி**
***மாதரசிகள் காதலுக்குப் பொன் விதி***

வல்லமைதான் கடவுள் என்ற இராவணேஸ்வரன் வாழ்ந்தறியக்
காதலும் புதுவேதமானது- காமன் கணைபட்டுப் புண்பட்ட மனம்,
புடமிட்ட காதலால் பொன்னாய் ஒளிர்ந்தது-ஸ்ரீராமன் கணைபட்டுப்
புள்ளி மானாய் வீழ்ந்தது, பிறன்மனை நோக்கல் பிழையென அறிந்தது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-09-05-23*

# துயிலாத கண்கள்

நினைப்பதற்கு என் மனதில் உன்னைத் தவிர
வேறு நினைவுகளில்லை, துடிக்கும் என் இதயத்தில்
ஒவ்வொரு துடிப்பும் உன்னை எண்ணித் துடிக்க
யுகங்களாய் எரிநரகில் வாடும் என்தன் நிலை



வானாய் நின்று உன்னைக் கண்டேன்
இளந் தென்றலாய் மாறி உன்னை அணைத்தேன்
மண்ணாய் உன்னைத் தாங்கி பூவாய் மலர்ந்தேன்
மனங்கலந்த காதலால் மல்லிகைாய் மணந்தேன்




வண்ணப் பூவாய் நான் மலர
பூவே நீ தந்த காதலோ வசந்தம்
வாச மலராய் நீ என்னைச் சூட
மனமெங்கும் உன் இனிய சுகந்தம்



தேன் சுரக்கும் வண்ண மலரை தேனீ நாட-
காதல் மணம் வீசும் என் மலரே- நாளும்
என்னை நாட, பூவாய் மணக்கும் என் மனம்
பூவே பூச்சூடும் காதலர் தினம்

கணை தைத்த கலைமானாய் வாடும்
காதல் மனம்-பனி படர்ந்த மலைபோல்
என்னைச் சூழ்ந்த உன் பிரிவின் சோகம்
என் இதயவிணையில் முகாரியின் ஆலாபனம்

என் விழிகளில் கண்ணீர் வெள்ளம்
என் மொழிகளில் ஒற்றைக் குயிலின் கானம்
கொல்லும் விஷமாய் உன்மேல் கொண்ட காதல்
மலரும், முள்ளும், மாறிட என் சாதல்

மலரைத் தந்தேன் ஏனடி
முள்ளைத் தந்தாய்?
பூ மனதை தந்தேன் ஏனடி
புழுதியில் எறிந்தாய்?

மலர்களால் எழுதிய என் காதல்
ஒரு மாலைக்குள் வாடியதென்ன?
வான் மேகங்களில் எழுதிய காதல்
மழை நீராய்க் கரைந்ததென்ன?

கரையில் எழுதிய காதலை-அலைகள்
அழித்ததென்ன?-அழியாது என
இதயத்தில் எழுதிய காதலை
காதலே நீ மறந்ததென்ன?

உதயம் வரும்போதெல்லாம் பூத்துச் சிரிக்கும்
மலர்கள்-, அஸ்தமனத்தில் வாடி உதிர்வதென்ன
பூபாளம் பாடிய சோடிக் குயில்களில் ஒன்று
இன்று தனிமையில் கூவிக் கரைவதென்ன?



என் நினைவில் குமுறும் சோக எரிமலை
என் நெஞ்சுக்குள் பொங்கும் சுனாமிப் பேரலை
பார்வதியைப் பிரிந்த தேவதாஸாய் என் நிலை?
உருகும் பனி மலையாய் என் விழிகளின் நிலை



கடலிலும் ஓயாத அலை, காதல்
மனதிலும் ஓயாத உன் நினைவலை
என் பூ நெஞ்சுக்குள் உன்னால் பூகம்பம்
மூச்சடங்கி, பேச்சடங்கிட எல்லாம் பேரின்பம்

வெள்ளைப் புறாவைத் தூது விட்டேன்
வேடன் கணையால் மடிந்ததடி,
புள்ளிக் குயிலைத் தூதுவிட்டேன்
தன் சோடிக்குயிலோடு பறந்ததடி

கன்னிக்காய் யாத்த காதல் வேள்வியில்
காதலன் நானே காதலுக்கு ஆகுதி
காதல் சொர்க்கமா? நரகமா? கூறுங்கள்
ஒரு பெண்ணின் மனம் குபேரநிதியா? சொல்லுங்கள்

காதலில் தோற்றவனுக்குத் தெரியும் காதலே பேரின்பம்
காதலிக்காய் தோற்பது காதலுக்கு இன்பம்-
காதலே நீ வாழ்ந்தால் அதுவே பேரின்பம்
உனக்காய் இறப்பதும் எனக்கோ கோடி இன்பம்

எங்கிருந்தாலும் நீ வாழ்க
உன் இதயமும் அமைதியில் வாழ்க

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-20-12-2023*

# உறவும் பிரிவும்

---





உயிரோடு கலந்த உறவின் இழப்பு-நெஞ்சிலோ
தந்தி அறுந்த மரகத வீணையின் தவிப்பு
ஈர விழிகளிலே கண்ணீரின் கொதிப்பு-வாழ்வு
இதுதானா மனதில் சலிப்பு, பிரிவின் தகிப்பு

சிரித்து மகிழ்ந்து காதலாகி-நெஞ்சை
நிறைத்த உறவு-இன்று மனம் புலம்பி
கண்ணீர் சிந்த, மண்ணில் புதைந்து
நெஞ்சில் பொக்கிஷமான நிகழ்வு

பூவாய் பூத்து மணந்த உள்ளம் சோக வெள்ளத்தில்
வாடிச் சோர்ந்திருக்க, சூடிய மலரும் வாடி உதிர்ந்திருக்க
சொந்த பந்தம் வாழ்த்திய உறவும், ஒரு கனவாய் கலைந்து
பொய்யாய் பழங்கதையாய் போகுமோ? தவிக்கும் மனசு




வாழ்வு இறை தந்த வரம்-இனிய இல்லறமோ
கண்ணாளா, நீ சூட்டிய பொன்னாரம்
இதயங்களின் சங்கமத்தில் மலர்ந்த காதல்
இன்றோ பிரிவால் என்னை வருத்தும் சாதல்




இணையைப் பிரிந்த மனதில் இமயத் துயரம்
தோகை இழந்த மயிலாய் காதல் மனதில்
வாழ்வே மாயம் என்ற அவலம்

ஜோடிக் கிளிகளாய் கொஞ்சி மகிழ்ந்த காலமும்
கனவானது, வானம்பாடிகளாய் பாடி மகிழ்ந்த
வசந்தம் கண் மறைந்தது போனது, பருவங்கள்
மாறும் வாழ்வில் எல்லாம் கானல் நீரானது



நெஞ்சிலே காதலின் அழியாத கோலம்
செவ்விழிகளின் ஓரத்தில் உதிரத் தவிக்கும் கண்ணீர்
மழைக் காலம், இதயத்தில்- ஶ்ரீராமனைப்
பிரிந்த சீதையின் மாறாத துயரம்

என் இதயம் மகிழக் காதலாய் நீ தந்த உறவு
என்னைத் தாயாய் மாற்றிய இன்பக் கனவு
தவிக்கும் நெஞ்சில் அமைதியாய் உன் வரவு
இன்றோ தகிக்கும் தனிமையில் என் வாழ்வு

நிறைவோடு விடை கொடுத்து, தனிமையில், நெஞ்சம் நிறைந்த
நன்றியோடு உன்னை நினைந்து போற்றுகின்றேன், பிரிவோ
நெருஞ்சி முள்ளாய் வருத்த, தனிமையில் நான் புலம்புகின்றேன்

மெய்யழியும், பொய்யழியும், உயிர் மெய்யொடு கலந்து
இதயம் நிறைத்த காதல் அழியுமோ? கத்தும் கடல் ஏழும்,
கருவான் நிலவும் சாட்சியாக, என் உயிர் உள்ளவரை
என் இதயம் ஒருபோதும் உன்னை மறவாது இது சத்தியம்



இன்பத்திலும், துன்பத்திலும் இணை பிரியாத வாழ்வு
அன்றில் பறவைகள்போல் ஒன்றான உறவு
என்னைப் பிரிந்த உன்னிலும், உன்னைப் பிரிந்த
என்னிலும் என்றும் வாழும் நம் காதல் உறவு

என் இதயத்தில் நன்றியின் பூரிப்பு,
நண்பனாய், காதலனாய், கணவனாய் என்னோடு
நீ வாழ்ந்த காலங்கள் வசந்தமான நிகழ்வு
நம் வாழ்வோ கடவுளின் மகத்தான அன்பளிப்பு

என் இதயத்தில் எண்ணில்லாத ரணங்கள்
தந்தி அறுந்த என் இதயவீணையில் அபஸீரங்கள்
நீயோ இன்று மாலையிட்ட படமான நிகழ்வு
அழகிய கனவாய் நம் காதல் உறவு

நீலக் கடலான நெஞ்சில் ஓயாத உன் நினைவலைகள்,
சோகக் சுனையான இதயத்தில் உன்னால் மலர்ந்த
ஆயிரமாயிரம் காதல் தாமரைகள்

உறவும், பிரிவுமான வாழ்வில் வரமும், சாபமுமாய்
இன்ப துன்பம், எல்லாம் நின் சித்தம் இதயம் சரணடைய
இறைவா என் மனதில் அமைதியின் ஆனந்தம்

என் கண்ணீரில் தோன்றும் வண்ணம் குன்றாத
உன் காதல் வானவில்-உன் பிரிவுப் பூகம்பம் வீழ்த்திய
நெஞ்சில் இதழ் உதிர்க்கும் காதல் புஷ்பங்கள்



அன்பு வாழும் நெஞ்சில் ஆயிரம் கோடி இன்பங்கள்
பிரிவு நிஜமென்றாலும், ஒன்றாய் நாம் வாழ்ந்த
வசந்த காலங்கள், நான் வாழும் காலமெல்லாம்
காதலே என் நெஞ்சில் உன் மலரும் நினைவுகள்

மரணம் நம்மைப் பிரித்தாலும். நம் காதலுக்கு அழிவில்லை
நீ மறைந்தாலும் என் நெஞ்சில் மாறாத உன் நினைவுகள்
பொங்கும் பூம்புனலான இதயத்தில் நிலைத்த ஆனந்தம்
உறவிலும், பிரிவிலும் நம் காதலோ பேரின்பம்

மரணம் உனக்கில்லை, என் மனதில் நீ வாழும் வரை
பிரிவும் நமக்கில்லை-என் பிரியமானவனே
என்னில் நீயும், உன்னில் நானும் வாழும்வரை

நெற்றிக்குப் பொட்டில்லை, நெய் தடவும் நீள் கூந்தலுக்கு
வாச மலரில்லை, பொன் மேனிக்கு நறுமணமில்லை ,
நீ தந்த குங்குமமும், மங்களமும் குதூகலமும் உன்னோடு
போனது, உன் நினைவால் என் உயிர் வாடுது.



என் நெஞ்சில் நீ ஏற்றிய காதல் தீபம் அணையாது
நான் வாழும் காலமெல்லாம் என் நெஞ்சம் உன்னை மறவாது,
கைம்மை எனக்கில்லை, மஞ்சளும், குங்குமமும், மலர்களும்
நெஞ்சில் நிறைய நம் காதலுக்கு வானமும் எல்லையில்லை

அழுதபோதெல்லாம் என் விழிநீர் துடைத்த உன் விரல்கள்,
இன்று உன் பிரிவால் அழும்போது என் கண்ணீர் துடைக்க
நீயில்லாத நிலைகள், நெஞ்சில் குமுறும் சோக எரிமலைகள்

நீயில்லாத இரவுகள் நித்திரையின்றிக் கழிய
நித்தமும் மனம் உன் நினைவில் தவமாய்க் கழிய
என் சித்தம், நினைப்பு, செய்கை எல்லாம் நீயே

மறக்கத் துடித்தாலும்-மறவாது
நினைவில் வரும் உறவு, மரணம் பிரித்தாலும்
என் மனதை ஆளும் காதல் கனவு நீதான்

உன்னை நேசித்த இதயமும், உன்னை சுவாசித்த
உயிரும், இன்றும் உன் நேசத்தால் வாழ்வதை
நீ மட்டுமே அறிவாய்-அது போதும்



உன்னைப் பிரிந்து ஒற்றைக் குயிலாய்க் கரைகின்றேன்
கொஞ்சும் கிளியைப் பிரிந்த அஞ்சுகமாய்த் தவிக்கின்றேன்
என்னுள் நிலைத்த ஆனந்தம், நான் அறிய-நீயே
என்னை ஆட்கொண்ட பேரின்பம்

மையேந்தி ஆடிய விழிகள் நீரேந்தி ஆட
மலர் சூடிப் பூத்த குழல் பூவின்றி வட
வளையேந்தி ஆடி கரங்கள் கைகூப்பித் தொழ
குங்கும் சூடிய நெற்றி வெறிச்சோடிப்போனதே

வந்ததும் உன்னால் , வாழ்வதும் உன்னால்,
என் கடன் முடித்து வருவதும் உன்னால்,
வழியும், உண்மையும், வாழ்வுமானவனே
என்றும் என் புகலிடம் நீயே இறைவா

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-08-12-2023*